# வாழ்வே ஒரு பாச உலகம்

## 'க்ளிக்' அடித்துவைப்பீர்... நிரந்தரம்

எப்போதுமே உங்கள் கையோடிருக்கட்டும் தப்பாத் துணையான க்ளிக் III. மறைந்தோடும் வாழ்வின் மணியான கணங்களை நிரந்தரமாக்கிக் காப்பீர் நினைவுமுகம் கண்முன் நிற்பதற்கே.

'இலக்கு வைத்ததும் சடக்' என எடுக்கவே ஆக்பா க்ளிக். காரியத் தகுதி வாய்ந்தது. உண்மை தவறாதது.
கையாள எளிது. சிக்கனமிக்கது.

- 120 பிலிம் ரோல் ஒவ்வொன்றுக்கும் பெரிது பெரிதாக (6 x 6 செமீ.) படங்களைப் பெறுவீர்கள்.
- சிறப்பானதோர் தயார்த் தோலுறை, போர்ட்ரெய்ட் லென்ஸ், ஃப்ளாஷ்கன் ஆகியவை மேற்கொண்டு தனிவிலைக்குக் கிடைக்கும்.

தெள்ளத் தெளிவான பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மெண்டுகளுக்கும் கண்டிப்புடன் கோருவீர் ஆக்பா-கேவார்ட் போட்டோத் தாள்களை.
அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.
ஆக்பா-கேவார்ட் AG லீவர்குஸன் அவர்களின் கூட்டுறவோடு இவற்றைத் தயாரிப்போர்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.

விலை
ரூ. 56.25
(எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. இதர வரிகள் தனி)



ஏகபோக விநியோகஸ்தர்கள்:
ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்
பம்பாய் • நியூ டெல்லி • கல்கத்தா • சென்னை




® புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட், ஆன்ட்வெர்ப்/லீவர்குஸன் ஆகியோரின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்.




Simoes/AG/17 b/Tam

# இறுதியாக—செயற்கை இழைத் துணிகளுக்கு ஒரு வெண்மை தரும் சாதனம்

# டினோபால்®-எஸ்

டெரீன்®, 'டெரீன்'/காட்டன், நைலான் முதலான துணிகளுக்கு வெண்மை தருகிறது

# Tinopal®-S

உங்களது செயற்கை இழை மற்றும் கலப்பு இழைத் துணிகளை சலவை செய்த பிறகு கடைசியில் அலசுவதற்கு முன், தண்ணீரில் சிறிது டினோபால்-எஸ் சேர்க்கவும். உங்கள் வெள்ளைத் துணிகளில் மிகுந்த வெண்மை பளிச்சிடும். டினோபால்-எஸ்ஸின் திறனால் தடவைக்கு தடவை வெண்மை மிளிரும்!




## டினோபால்®-எஸ்

### செயற்கை இழைத் துணிகளுக்கு

சிறந்த வெண்மை தருகிறது

**இன்றே டினோபால்-எஸ் வாங்குவீர்**

®டினோபால், சீபா-கெய்கீ லிட்., ஸ்விட்ஸர்லாந்தின்
பதிவுபெற்ற ட்ரேட் மார்க்.
கே. பி. யின் ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்
11050, பம்பாய் 20 BR

Shilpi HPMA 13 B/73 Tam

# கல்கி பொருளடக்கம்

பிரமாதீச, ஆவணி 24 - செப். 9, 1973





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்ப னைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

மேலட்டையில் ஒட்டைச் சிவிங்கி: "உயரப் போட்டி யானாலும் சரி, அழகுப் போட்டியானாலும் சரி, கலந்து கொள்ள நான் தயார்!"
வண்ணப்படம்: எஸ். ஆனந்த்.

## வாய் நாற்றம் உங்களை விலகி நிற்கச்செய்கிறது!




DCG.6.48 TH

# கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களின் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத அளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.

அதன் வியக்கவைக்கும் பெப்பர்மின்ட் சுவையுடனே— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே,
வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும்விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**



கல்கி



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 33 -- இதழ் 6

# திருப்திகரமான திருப்பம்

தில்லியில் கையெழுத்தான இந்தியா - பாகிஸ்தான் உடன்பாட்டை நமது அண்டை நாட்டு உறவு முறையில் திருப்திகரமான திருப்பம் என்று மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்.

பேசிப் பேசிக் காலம் கழிப்பதிலும் தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் எனப் பிடிவாதமான போக்கைக் கடைப்பிடிப்பதிலும் சமர்த்தர்கள் என்று நமக்குப் பழகிப் போனவர்கள் பாகிஸ்தான் தலைவர்கள். அவர்களுடன் உடன்பாடே காண முடியாதோ என்று தான் நமக்குத் தோன்றியது.

ஆனால் விடாப்பிடியாக, எப்படியும் உபகண்டத்துப் பிரச்னைகளை வேறு நாடுகளின் தலையீடின்றி நாமே தீர்த்துக் கொள்ளவேண்டும் என்ற நல்லறிவும் விவேகமும் இந்தியா, பாகிஸ்தான், பங்களா தேசம் ஆகிய மூன்று நாட்டுத் தலைவர்களிடமும் செயல்பட்டதனாலேயே இந்த உடன்பாடு சாத்தியமாயிற்று.

பேச்சு வார்த்தைகளில் இந்தியா—பாகிஸ்தான் பிரதிநிதிகள் மட்டுமே கலந்து கொண்டாலும், பங்களா தேசப் பிரதமருடைய கருத்துக்களும் அதிகார பூர்வமாகவே தெரிவிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டன என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். காலதாமதமின்றி உடன்பாட்டை வரவேற்று பங்களா தேசப் பிரதமர் பேசியிருப்பது போற்றத்தக்கது.

இந்தியா — பங்களாதேஷ் கூட்டறிக்கையின் அடிப்படையிலேயே உடன்பாடு ஏற்பட்டிருக்கிறது. பாகிஸ்தானிலுள்ள எல்லா வங்காளிகளையும் பங்களா தேசத்துக்கு அனுப்பவும், பங்களா தேசத்திலுள்ள பாகிஸ்தானியர்களில் பெரும்பான்மையினரைப் பாகிஸ்தானுக்கு அனுப்பவும், இந்தியாவிலுள்ள போர்க் கைதிகளை — விசாரணைக்குத் தேவையான 193 பேர்களைத் தவிர மற்றவர்களை — பாகிஸ்தானுக்கு அனுப்பவும் இசைவு தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இவையெல்லாம் ஏக காலத்தில் நடைபெற வழி வகுக்கப்பட்டிருக்கிறது.

பாகிஸ்தான் சில வங்காளிகள் மீது எதிர் நடவடிக்கையாகத் தேசத் துரோக விசாரணை நடத்தத் திட்டமிட்டிருந்தது கைவிடப்படுகிறது என்பது இப்போது ஏற்பட்டுள்ள முக்கியமான முன்னேற்றம். பங்களாதேசமும் போர்க் கைதிகள் விசாரணையைச் சிறிது காலத்துக்குத் தள்ளிப் போடும். இதன்மூலம் பாகிஸ்தான் பிரதமர் புட்டோவுக்கும் பங்களா தேசப் பிரதமர் ஷேக் முஜிபுர் ரஹ்மானுக்கும் இடையில் சந்திப்பு ஏற்பட வாய்ப்பும் அவகாசமும் அளித்திருப்பது பாராட்டவேண்டிய ராஜதந்திரம். நேர் சந்திப்புக்கு முன் பாகிஸ்தான், பங்களா தேசத்தை அங்கீகரிக்கக் கூடும் என்று நம்புவதற்கும் இடம் இருக்கிறது. அங்கீகாரத்துக்குப் பின் நேரிடையாக மூன்று நாட்டுப் பிரதிநிதிகளும் சேர்ந்து தீர்த்துக் கொள்ள வேண்டிய விஷயங்கள் பல இருப்பதால், விரைவிலேயே அங்கீகாரம் கிடைக்கலாம் என்பது திருப்தி அளிக்கும் நிலவரம்.

இந்தியாவைப் பொறுத்த வரையில் போர்க் கைதிகள் திருப்பி அனுப்பப்பட்டு விட்டால், ஒரு பெரிய சுமை நம்மை விட்டு அகன்றதாகக் கருதலாம். பிறகு சிம்லா ஒப்பந்த அடிப்படையில் இந்தியா — பாகிஸ்தான் உறவு முறைகளை நாம் சீராக்கிக் கொள்ளும் நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம். இதற்கு இப்போது செய்து கொண்ட உடன்பாடு வழிவகுக்கிறது.

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையில் நிலவி வரும் விரோத மனப்பான்மை இப்போது ஏற்பட்டுள்ள உடன்பாட்டினால் முற்றிலும் மறைந்து விடவில்லை என்பது உண்மையே. ஆனால் அது மறைந்து போக, மேலும் பேச்சு வார்த்தைகளைத் தொடரவும், சுமுகமான சூழ்நிலையில் அவற்றை நடத்தவும் புதிய சாத்தியக்கூறுகளையும் வாய்ப்புக்களையும் இந்த உடன்படிக்கை அளிக்கிறது. இந்தப் புதிய வாய்ப்புக்களை நாம் பயன்படுத்திக்கொண்டு நிரந்தர சமாதானத்துக்கான வழி வகைகளைத் தேடிக் கொள்ள வேண்டும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## முதல்வருக்குப் புரிகிறது

கோவையில் சென்ற மாத இறுதியில் நடைபெற்ற சிறுவாணி திட்டத் தொடக்க விழாவில் கேரள முதல்வர் அச்சுத மேனனையும் அருகில் வைத்துக் கொண்டு முதல்வர் கூறியுள்ள சில கருத்துக்களைப் பார்க்கும் போது ஆச்சரியமாயிருக்கிறது. இவ்வளவு நல்ல கருத்துக்களைக் கூறுகிற இதே முதல்வர் தானா மாநில சுயாட்சிக் கொள்கை பற்றியும் ஈ. வெ. ரா.வுடன் சேர்ந்து மேடைகளிலே பேசும்போதும் வேறுவிதமாகப் பேசுகிறார் என்று சிந்தித்து இந்த முரண்பாட்டினைப் புரிந்துகொள்ள முடியாமல் தவிக்கிறோம் நாம். ''தமிழ்நாடு கேரள மாநிலங்களுக்கு இடையே நிலவும் விட்டுக் கொடுக்கிற மனப்பான்மையும் பரஸ்பர உதவி எண்ணமும், இதர மாநிலங்களுக்கு வழிகாட்டியாக அமையும். நாட்டின் எந்தப் பகுதியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி, அவர்கள் தங்கள் விருப்பப்படி நாட்டின் பிற பகுதிகளில் சென்று பணியாற்றும் உரிமையை நான் மறுக்கவில்லை. மொழி, இனப்பாகுபாடு இன்றி அனைவருக்கும் அரசியல் சட்டரீதியான உரிமைகளை உறுதி செய்வது மாநில அரசாங்கங்களின் கடமையாகும். ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள பெரும்பான்மை மொழியினரை மாப்பிள்ளைக்கு ஒப்பிட்டால் அங்குள்ள மொழிவாரிச் சிறுபான்மையோரை மாப்பிள்ளைத் தோழனுக்கு ஒப்பிடலாம். சுயநலவாதிகளின் தவறான பிரசாரத்தினால் இரு மாநிலங்களின் இடையே நேச உறவு குலையாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும்''

என்று பரந்த மனப்பான்மையைக் காட்டிச் சொற்பொழிவு செய்திருக்கிறார் தமிழக முதல்வர். இந்த அளவு முதல்வருக்கு நாட்டு ஒற்றுமையின் முக்கியத்துவமும், ஒருமைப்பாட்டின் அவசியமும் புரிந்திருக்குமாயின் அதைப் பாராட்டியே ஆக வேண்டும். இந்தப் பரந்த மனப்பான்மையையும், மாப்பிள்ளைத் தோழன் உதாரணத்தையும் சிறுவாணித் திட்டத் தொடக்க விழாவோடு மறந்து போய்விடாமல், எப்போதும் ஞாபகம் வைத்திருந்து மக்களுக்கு எடுத்துச் சொல்லுமாறு முதல்வரை வேண்டுகிறோம்.

## விலைவாசிகள் குறைய!

விலைவாசி உயர்வைத் தடுக்க விற்பனை வரிச் சலுகை அளித்ததற்காகவும், பண்டங்களின் வாங்கிய விலை, விற்பனை விலைகளைக் கடைகளின் முன் எழுதிவைக்க உத்தரவிட்டதற்காகவும் இதை மீறுகிறவர்கள் மேல் பாதுகாப்புச் சட்டத்தின்படி நடவடிக்கை எடுக்கப்படும்என்று அறிவித்ததற்காகவும், தமிழ்நாடு அரசைப் பாராட்டலாம். கடலை எண்ணெய்க்கு இனி ஒரு கட்ட வரியே இருக்கும் என்பதும் பருப்பு வகை மீதான வரி முழுதும் இரத்தாகிறது என்பதும் அதனால் விலைகள் குறையும் என்று எதிர்பார்க்கப்படுவதும் சரிதான். விலைவாசிகள் குறைய இப்படி உருப்படியாக ஏதேனும் செய்ய முன்வந்ததை மக்கள் நன்றியோடு பாராட்டுவர். தி. மு. க. தன் துணைக் கட்சிகளோடு விலைவாசி உயர்வுக்காக ஆட்சேப தினம் அநுஷ்டிக்கப் போவதாக அறிவித்திருப்பது சிலருக்கு வியப்பளிக்கக் கூடும்.

எதிர்க்கட்சிகள்தாம் எதிர்ப்புப் போராட்டம் கண்டன ஊர்வலம் எல்லாம் நடத்தும். ஆனால் இங்கே ஆளும் கட்சியே விலைவாசி உயர்வு எதிர்ப்புப் போராட்டம் நடத்த முன்வருகிறதே என்று எண்ணக் கூடும். ஆனால் தமிழகத்தைப் பொறுத்தவரையில் தி.மு.க. ஆளும் கட்சி என்றாலும் புதுதில்லியைப் பொறுத்தவரை அது எதிர்க்கட்சி தான் என்பதை மறந்துவிடக் கூடாது.

இந்திரா அரசின் சோஷலிஸம் வெற்றுப் பேச்சு என்பதும் அவர்களது கொள்கைகள் நாளுக்கு நாள் மக்களின் துயரை அதிகரிப்பதில்தான் கொண்டுவிடுகிறது என்பதும் நிதரிசனமாகத் தெரியும்போது இங்கே ஆளும் கட்சி அந்தக் கொள்கைகளுக்கு எதிர்ப்பைத் தெரிவித்துக் கொள்வது சரியான காரியம்தான். அந்த அளவில் இதை வரவேற்கவும் செய்யலாம். எதிர்ப்பைத் தெரிவிப்பதுடன் மட்டும் நின்று விடாமல் வரிகளைக் குறைப்பதும் சுதந்திரப் பொருளாதாரத்துக்கு ஊக்கம் அளிப்பதுமே உற்பத்தி பெருகவும் விலைவாசிகள் குறையவும் சிறந்த வழி என்பதை தி.மு.க. தலைவர்கள் உணர்ந்து புது தில்லிக்கு உணர்த்தவும் முன்வர வேண்டும்.

## ருஷ்யாவுக்குச் செல்கிறார்

''தினமணி கதிர்'' ஆசிரியர் சாவி அவர்கள் 6–9–73 அன்று டில்லிக்குச் சென்று அங்கிருந்து மாஸ்கோவுக்குச் செல்கிறார். சோவியத் யூனியன், ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு இவற்றின் அழைப்புக்கு இணங்க ரஷ்யாவிலும், கிழக்கு ஜெர்மனியிலும் மூன்று வார காலம் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு இந்தியாவுக்கு அக்டோபர் முதல் வாரத்தில் அவர் திரும்புகிறார்.


திரு 'சாவி'

திரு சாவி முன்னர் அமரர் கல்கியின் கீழ் இப்பத்திரிகையின் துணை ஆசிரியராகப் பணியாற்றியவர். பிறகு 'வெள்ளிமணி' என்ற பத்திரிகையைச் சிறிது காலம் மிகச் சிறப்பாக நடத்தி வந்தார். பத்திரிகைத் துறையில் நீண்ட நாள் அனுபவமும் நகைச்சுவையாக எழுதுவதில் அபார ஆற்றலும் உள்ளவர்.

## விடிவது என்று?

போர்க்கைதிகள், பாக் - பங்களா பிரஜைகள் பரிவர்த்தனை ஒப்பந்தம்

அபரிமித பாதுகாப்புச் செலவு காரணமாய் வரிக் கொடுமை

அபரிமித பாதுகாப்புச் செலவு காரணமாய் வரிக் கொடுமை

இந்தியர்

பாகிஸ்தானியர்

என்னவோ ஒப்பந்தம் கையெழுத்தாச்சாமே, உனக்கு ஏதாச்சும் தெரியுமா?






அவரது அயல்நாட்டுப் பிரயாணம் நல்ல முறையில் அமைந்து மகிழ்ச்சியோடு தாய் நாடு திரும்புவதுடன் தமது அனுபவங்களை எழுதி நம்மையும் மகிழ்விக்க வாழ்த்துகிறோம்.

## முதல்வர் கூறும் சிவப்புப் பணம்

பொருளாதாரச் சீரழிவுக்கு முதல்வர் கூறுகிற காரணங்களில் ஒன்று கோவையில் அவராலேயே பொதுக்கூட்டத்தில் விளக்கிப் பேசப்பட்டிருக்கிறது. ''கறுப்புப் பணமும், வெள்ளைப் பணமும் மட்டும் இன்றிச் சிவப்புப் பணமும் இன்று நாட்டில் புழங்குகிறது. பொருளாதாரச் சீரழிவுக்குச் சிவப்புப் பணமும் ஒரு முக்கிய காரணமாகும். அந்நிய நாடுகள் ஒன்றிலிருந்து புத்தகங்களின் உருவத்தில் இந்தியாவுக்குள் வந்து கம்யூனிஸத்தைப் பிரசாரம் செய்து வரும் சிவப்புப் பணத்தின் இறுதி நோக்கம் நாட்டின் பொருளாதாரத்தை நாசம் செய்வதே ஆகும் என்று கூறிய முதல்அமைச்சர் சிவப்புப் பணத்தைப் பற்றிக் கடுமையான முறையில் குற்றம் சாட்டியிருக்கிறார்.

கறுப்புப் பணம், சிவப்புப் பணம் ஆகிய இரண்டு வகைப் பணமும் புழக்கத்தில் இருப்பதற்கு மத்திய அரசாங்கம்தான் காரணம் என்றும் அவற்றைத் தடுக்க மத்திய அரசாங்கம் எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளாத வரை பண்டங்களின் விலை ஏற்றத்துக்கு மாநில அரசாங்கங்களைக் குறை கூறிப் பயனில்லை என்றும் அவர் வருத்தப்பட்டிருக்கிறார்.

காங்கிரஸ் போர்வையில் சோஷலிஸ கோஷம் எழுப்பிக் கொண்டு இன்று கம்யூனிஸ்டுகள் பலர் இந்திரா காங்கிரஸுக்குள் ஊடுருவியிருப்பது வெளிப்படையான ரகசியம் என்னும் போது சிவப்புப் பணம் பற்றிய முதல்வரின் பேச்சு மிகவும் கவலைக்கிடம் அளிப்பதாக இருக்கிறது.

மாநில முதல்வரின் பேச்சுக்கு மதிப்பளித்து மத்திய அரசு உடனே இது விஷயத்தில் உரிய கவனம் செலுத்தி ஆய்வு நடத்தவும் விளக்கம் தரவும் வேண்டும்.

## பெருந்தலைவரின் சொற்பொழிவு

நாட்டு நலனில் அக்கறையும், கவலையும் கொண்ட பெருந்தன்மை நிறைந்த காந்தியக் குரல் ஒன்று தமிழ் நாட்டிலிருந்து அகில இந்தியாவுக்குமாக ஒலிக்கிறது. அந்த ஒரே குரல் திரு காமராஜ் அவர்களுடையது ஆகும். நாட்டின் நிலைமைபற்றியும், இளைஞர்களின் எதிர்காலம் பற்றியும் கவலைப்பட்டுக் காந்தியடிகளின் 'மார்க்கங்களை நினைவூட்டி ஒவ்வொரு சொற்பொழிவிலும் அழுத்தமாகக் கூறி வருகிறார் அவர். 'அரசியலில் பெருந்தன்மை குறைந்து தனிப்பட்ட விரோதங்களும், குரோதங்களும், நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறதே' என்று மனப்பூர்வமாக வருந்துகிறார் அவர். 'இன்று ஏற்பட்டுள்ள சில குறைகளுக்கு நானும் ஒரு காரணம், என்று சொல்லிக் கொள்ளக்கூடிய அளவுக்கு நெஞ்சு உரமும் பெருந்தன்மையும் அவரிடம் உள்ளன. சென்னை மாநிலக் கல்லூரி மாணவர் பேரவையைத் தொடங்கி வைத்து, ''உணவு, உடை, மருத்துவ வசதி, வீட்டு வசதி போன்ற அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்யாத வரை இந்தியாவில் ஆடம்பரப் பொருள்கள் உற்பத்தியாகக் கூடாது. உண்மை, நேர்மை ஆகியவை இப்போது நம் நாட்டில் இல்லையோ என்று தோன்றுகிறது. இப்போது தலைவர்கள் உண்மையைப் பேசுவதில்லை. சமுதாயத்தைக் காப்பாற்றுவதற்குப் பதிலாக அமைச்சர்களும், தலைவர்களும் இந்தச் சமுதாயம் இருப்பதே தங்களுக்காக என்று கருதித் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவும் தங்கள் அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்ளவும் தவறுக்கு மேல் தவறு செய்து கொண்டே போகிறார்கள். ஊழல் மலிந்து விட்டது. ஊழல் ஒழிந்தால்தான் நாடு உருப்படும். எங்களுடைய தலைமுறை அதிர்ஷ்டமுள்ளது. ஏனெனில் அப்போது காந்திஜி எங்களுக்கு வழிகாட்டியாக இருந்தார். இன்று உங்களுக்கு அப்படி ஒரு வழி காட்டும் தலைவர் இல்லையே?'' என்று அவர் பேசிக் கொண்டே வந்தபோது மாணவர்கள் குறுக்கிட்டு, ''எங்களுக்கு நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள்தான் வழிகாட்ட வேண்டும்'' என்று குரல் கொடுத்திருக்கிறார்கள். அந்தரங்க சுத்தியோடு பேசும் திரு காமராஜ் அவர்களால் தான் நாட்டுக்கு இன்றைய நிலையில் வழி காட்ட முடியும் என்று மாணவர்கள் மட்டுமல்லாமல் முதியவர்களும் ஏனையோரும்கூட உறுதியாக நம்புகிறார்கள்.

---

### ராஜாஜி சிந்தனை

ஏரித் தண்ணீர் விவசாயிகளுடைய நன்மைக்காக இருக்கிறது. தண்ணீரெல்லாம் தன்னுடைய சொந்த நன்மைக்குத்தான் என்று ஏரி நினைத்துக்கொண்டிருக்கக் கூடும். ஆனால் ஏரியில் நீரின் மட்டம் உயரும்போது தானே தண்ணீரை வெளியேற்ற வேண்டிய அவசியம் ஏரிக்கு ஏற்பட்டு விடுகிறது. இதுதான் இயற்கையின் நியதி. ஏரியைப் போலவே ஏராளமான செல்வத்தைச் சேர்த்து வைத்திருப்பவர்களும் மற்றவர்கள் நன்மைக்காக அதைத் தாராளமாகக் கொடுக்க வேண்டும். எனவே யாரும் பணம் படைத்தவர்களைப் பார்த்துக் கோபப்பட வேண்டாம். நாம் பொறுமையுடன் இருந்தால், பணம் படைத்தவர்கள் தாமே முன்வந்து தம்முடைய செல்வத்தைப் பொது நன்மைக்காக விநியோகிப்பதைக் காண்போம்.







## அமைச்சரும் விசில் அடிக்கிறார்!

தமிழக அமைச்சர் ஒருவர் மேடையின் மீது நின்று திறமையாக விசில் அடித்த காட்சியைப் பொதுமக்கள் கண்டு ரசிக்கும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறார்கள். பொதுமக்களுக்கு அந்தப் பாக்கியத்தை அளித்த அமைச்சர் திரு அன்பில் தர்மலிங்கம் அவர்கள்.

ஸ்ரீவில்லிப்புத்தூரில் நடைபெற்ற மாநில சுயாட்சி விளக்கப் பொதுக்கூட்டம் ஒன்றில் பேசும்போது திரு அன்பில் தர்மலிங்கம் அவர்கள் தம்முடைய அரசியல் எதிரிகளைத் தாக்கும் நோக்கத்துடன், ''எதைச் சொன்னாலும் விசில் அடிக்கும் இரசிகர் கூட்டம் ஒன்றை வைத்துக் கொண்டு, மன்றங்களைத் தொடங்கி நாட்டை விழுங்கி வருகிறார்கள் சிலர்'' என்று கூறிவிட்டு வாய்க்குள் விரலைச் செலுத்தி அவர் குற்றம் சாட்டிய அந்த இரசிகர்களை விடத் திறமையாகவே கூட்டத்தில் கூடியிருந்தவர்களுக்கு விசிலடித்துக் காட்டியிருக்கிறார். 'விசில் அடிச்சான் குஞ்சு'களைப் பழிப்பதற்காக 'விசில் அடிச்சான் அமைச்சர்'களாக மாறுபவர்களைப் பற்றி வெட்கக்கேடு என்பதைத் தவிர வேறு என்ன சொல்ல?

## ஸ்ரீ முருகனாரின் விதேக கைவல்யம்

ஸ்ரீ ரமண ஆசிரமவாசியாக நாற்பது ஆண்டுகளாக, வாழ்ந்து, ரமணரது பக்தியில் திளைத்து, மூழ்கி, பகவான் ரமணரின் நிழல் என மதிக்கப்பட்டு ஸ்ரீ முருகனார் என்று எல்லோராலும் செல்லமாக அழைக்கப்பட்ட திரு சி. கே. சுப்பிரமணிய அய்யர் ஆகஸ்டு 28ம் தேதி விதேக கைவல்யம் அடைந்தார் என்ற செய்தி துக்கத்தைத் தருவது. சுதந்திர கீதம் பாடி, அரசியல் உத்வேகத்தைத் தூண்டிவிட்ட ஸ்ரீ சி. கே. சுப்பிரமணிய அய்யர், ரமண பகவானின் கருணைக்குப் பாத்திரமானதிலிருந்து பகவானின் உபதேச மொழிகளைக் கவிதைகளாகப் பாடுவதில் இன்பம் கண்டார். சுமார் 40,000 தமிழ் வெண்பாக்கள் பாடி உலகிலுக்கு அளித்துள்ளார். ஸ்ரீ ரமணரைப் பற்றிய நூல்களில் ஸ்ரீ முருகனாரின் கவிதைகளுக்குத் தனி இடமுண்டு.

ஸ்ரீ முருகனார்






Criterion KM 2949 TM-B

# சகல மதங்களுக்கும் பொதுவான பக்தி

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

சமய சித்தாந்தங்கள் எல்லாம் ஒன்றுக்கு ஒன்று வேறுபட்டவையாக இருக்கின்றன. ஆனால் இத்தனை சித்தாந்தங்களும் பொதுவாக பக்தி வேண்டும் என்கின்றன.

எந்த சமய சித்தாந்தமானாலும் அது மனிதனை உயர்த்துவதற்காக ஏற்பட்டதேயாகும். மனிதன் ஒருத்தன்தான் சிருஷ்டியிலேயே உயர வாக்கில் அதிகமாக வளர்கிற பிராணி. பாக்கி பசு பட்சிகள் பக்கவாட்டிலேயே அதிகமாக வளர்கின்றன. இவன் எண்ணத்தாலும் உயர வேண்டும். தேக பலத்தில் மிருகங்களைவிடக் குறைந்தவனான மனிதன் புத்தி பலத்தால் அந்த மிருகங்களையும் அடக்கி ஆண்டு அவற்றிடமிருந்து தனக்கு வேண்டிய சௌகரியங்களைப் பெறுகிறான். அதே சமயத்தில் அந்த விலங்கினங்களுக்கு இல்லாத விசாரங்களும், தொல்லைகளும் மநுஷ்யனுக்குத்தான் இருக்கின்றன. எண்ணத்தினால் உயர்ந்தால் இந்த விசாரங்களிலிருந்து தப்ப முடியும். அப்படி விசாரங்களிலிருந்து விடுவித்து இவனை உயர்த்துவதற்குத்தான் எல்லா மத சம்பிரதாயங்களும் தோன்றியிருக்கின்றன. மற்றப் பிராணிகளுக்கு இல்லாத விசாரம் இவனுக்கு இருப்பது மட்டுமில்லை; இவன் முயற்சி செய்தால் விசாரத்திலிருந்து விடுபடுவதோடு நில்லாமல், மற்றப் பிராணி வர்க்கம் எதற்கும் கிடைக்க முடியாத ஞானத்தைப் பெற முடியும் என்று மத சித்தாந்தங்கள் யாவும் கூறுகின்றன. உலக விவகாரங்களை யெல்லாம் இயக்கி வைக்கிற ஒரு மகாசக்தியைத் தஞ்சம் புகுந்தாலே விசாரங்களிலிருந்து விடுபடலாம் என்று பொதுவாக இந்த எல்லாச் சித்தாந்தங்களும் ஒரே குரலில், ஏகமனதாகச் சொல்கின்றன. அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம், சைவ சித்தாந்தம், இன்னும் கிறிஸ்துவம், இஸ்லாம் முதலிய எந்த சம்பிரதாயமானாலும் சரி, பக்தி எல்லாவற்றுக்கும் பொது. புத்தர் பக்தியைச் சொல்லாவிட்டாலும் பௌத்தர்களால் பக்தியில்லாமல் முடியவில்லை. அதனால்தான் புத்தரையே ஸ்வாமியாக்கி, வேறு எந்த ஸ்வாமிக்கும் இல்லாத அளவுக்குப் பெரிய பெரிய மூர்த்திகளை அவருக்கு வைத்துப் பூஜை செய்கிறார்கள்.

அத்வைதத்தின்படி பக்தி செலுத்துகிற போது, ஈசுவரன் வேறு நாம் வேறு என்கிற எண்ணம் இல்லாமல் அதுவே நாம் என்ற அபேத பாவத்தைக் கைக்கொள்ள வேண்டும். 'பகவான் என்று மகாசக்தியாக சர்வக்ஞனாக (எல்லாம் அறிந்தவன்) ஒன்றை வைத்துப் பக்தன் என்ற அல்ப சக்தன், கிஞ்சித்ஞன் (சிறிதே அறிந்தவன்) பக்தி பண்ணுகிறான். இரண்டும் எப்படி ஒன்றாகும்?' என்று கேட்கலாம். அப்படியானால் பகவானுக்கு நாம் வேறா? பகவானுக்கு வேறாக மற்ற வஸ்துக்கள் இருக்கின்றன வெனில் அதெல்லாம் எங்கிருந்து வந்தன? வேறாக எங்கிருந்தோ வந்த வஸ்துக்களை அவன் எப்படி ஆட்டிப் படைக்க முடியும்? இப்படி யோசித்துப் பார்த்தால் ஒரே பரமாத்மா தான் ஈசுவரன் என்கிற சமுத்திரமாகவும், பலவிதமான ஜீவராசிகளான குளம், குட்டை, கிணறுகளாகவும் ஆகியிருக்கிறது என்று தெரியும். சக்தியில் ஏற்றத்தாழ்வு இருக்கலாம். ஆனால் அடிப்படையில் எல்லாம் ஒரே வஸ்து தான். அந்த அடிப்படைக்குப் போனால் நாம் அதுவாகவே ஆகிவிடுவோம். இதுதான் அத்வைத முக்தி.

வெறும் புத்திபூர்வமாக இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தால் பிரயோஜனம் இல்லை. இது அநுபவ சித்தியாக வேண்டும். இதற்கு ஈசுவர கிருபை இருந்தால்தான் முடியும். நம்மை எல்லாம் ஆட்டிப் படைக்கிற சக்தியின் அநுக்கிரகம் இருந்தால்தான், இந்த ஆட்டம் ஓய்ந்து அடிப்படைக்குப் போக வேண்டும் என்ற அத்வைத நாட்டமே நமக்கு வரும் என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்: ஈச்வராநுக்ரஹாதேவ பும்ஸாம் அத்வைத வாஸனா.

பகவான், பக்தன் என்று பிரித்தே தோன்றுகிற ஆரம்ப ஸ்திதியிலும்கூட, 'பகவானாக எந்தப் பரமாத்மா வந்திருக்கிறதோ அதுவேதான் பக்தனாகிய நானாகவும் ஆகியிருக்கிறது' என்ற நினைவை அடிக்கடி ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இதனால் பகவானிடம் நம் அன்பும் அதிகமாகும். ஏனென்றால் நம்மைவிட நமக்குப் பிடித்தமான, அல்லது அன்பான வஸ்து இல்லை அல்லவா ?

நம் காரியங்கள் அனைத்துக்கும் பலன் தருகிற ஈசுவரன், நாம் பக்தி பண்ணப் பண்ண அதற்குப் பலனாக மேலும் மேலும் அவனை நெருங்க அநுக்கிரகம் செய்வான். தான் யார், எப்படிப்பட்டவன் என்பதை யெல்லாம் அவனே தெரியப்படுத்துவான். நாம் அவனை ஆராய்ந்து பார்க்க வேண்டாம். அவனே நம் பக்திக்கு இறங்கித் தன் இயல்பைத் தெரியப்படுத்துவான். கீதையில் பகவான் இப்படியே சொல்லியிருக்கிறார் : ''பக்த்யாமாம் அபிஜாநாதி யாவான் யச்சாஸ்மி.''

இவ்வாறு ஈசுவரனின் அனந்த கல்யாண குணங்களை அறிந்தபின் அதையே பக்தர்கள் ரசிக்கிறார்கள். ஞானியோ இந்தக் குணங்களுக்கு ஆதாரமான நிர்குண சத்திய நிலையை பகவதநுக்கிரஹத்துடன் அடைந்து அதில் இரண்டறக் கலந்து விடுகிறான். இதற்கும் ஸகுண உபாசனைதான் ஆரம்பமாயிருக்கிறது.

இந்த ஸகுண உபாஸனை — அல்லது மூர்த்தி வழிபாட்டுக்காகத்தான் ''இஷ்டதேவதை'' என்ற கருத்து நம் மதத்தில் இருக்கிறது.

**அடுத்த இதழில்: இஷ்டதேவதை**

# பொட்டல்வெளி பட்டணமாகிறது!

தொழில் துறையில் பின்தங்கிய பகுதி என்று முத்திரை பெற்றுள்ள தூத்துக்குடி பிராந்தியத்தில் வேகமாக எழும்பிக் கொண்டு வரும் ஸதர்ன் பெட்ரோ கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பொரேஷனின் (ஸ்பிக்) ரசாயன உரச்சாலை வளர்ச்சியில் முக்கியமான சம்பவம் சென்ற ஆகஸ்டு 17ம் தேதியன்று நிகழ்ந்தது. இங்கே அமைக்கப்பட்டுள்ள உப மின்சார நிலையத்துக்குத் தமிழ்நாடு மின்சார வாரியம் அன்று மின்விசைத் தொடர்பைத் தந்தது. தொழிற்சாலையின் முன்னேற்றத்துக்குச் சுறுசுறுப்பு ஊட்டுவித்தது.

மின்வாரியம் அளிக்கும் மின்விசையை ஸ்பிக் தொழிற்களம் தானே அமைத்துக் கொண்டுள்ள உப–மின் நிலையத்தில் பெற்று, அதைத் தனது பல்வேறு பகுதிகளுக்கு எந்தெந்த அளவில் தேவைப்படுகிறதோ, அந்த அளவுக்குக் குறைத்து, வகைப்படுத்தி விநியோகிக்க ஏற்பாடுகள் செய்துகொண்டுள்ளது. இந்த உப–மின் நிலையத்துக்கு மின்விசை அளிக்கும் விழாவைத்தான் மின்சார அமைச்சர் திரு ஓ. பி. ராமன், தொழில் அமைச்சர் திரு எஸ். மாதவன் முன்னிலையில் சென்ற மாதம் நடத்தி வைத்தார். இந்த உபமின் நிலையத்தை நிறுவச் சுமார் நூறு லட்சம் செலவாகியுள்ளது. இதிலிருந்து இது எவ்வளவு பெரிய அம்சம் என்பது விளங்கும். ஸ்பிக் ஸ்தாபனம், தான் உபயோகிக்கும் மின்சாரத்துக்கு முழு உற்பத்தி நடைபெறும்போது நூறு லட்சம் ரூபாய் வரையில் மின்வாரியத்துக்குக் கட்டணமாக ஆண்டு தோறும் அளிக்கும்!

இந்தப் பிரதேசத்தில் விரைவில் வரப்போகும் மற்றொரு பிரம்மாண்டமான உரத் தொழிற்சாலைத் தூத்துக்குடி ஆல்கலி அண்டு கெமிகல்ஸ் என்ற புதிய கம்பெனி. சுமார் ரூபாய் நூற்றுமுப்பது கோடி முதலீடு செய்யப்படவிருக்கும் இப்புதிய உரத் தொழிற்சாலையில் ஸ்பிக் தொழிற்சாலையில் உற்பத்தி செய்யப்படும் அமோனியா, யூரியா முதலிய பொருள்களைத் தவிர, அமோனியம் குளோரைடு, சோடா ஆஷ், மேலாமின் போன்ற பல முக்கியமான ரசாயனப் பொருள்கள் தயாரிக்கப்படும். இரு தொழிற்சாலைகளும் முழுமையாகச் செயல்படும்போது தூத்துக்குடி பிராந்தியமே புதிய தோற்றம் அளிக்கும். உப்பங்கழிகளும், உப்புக் குவியல்களும், மணல் பரப்புமே உள்ள பிரதேசத்தில், பல தொழில்கள் ஒன்றையொட்டி மற்றொன்றாக மலரவிருக்கின்றன. இரண்டு பெரிய உரத் தொழிற்சாலைகளையொட்டி, அவற்றுக்கு ஆதாரமாக, இங்கேயே ஓர் எண்ணெய் சுத்திகரிப்புச் சாலையையும் நிறுவினால் நல்லது என்று அதற்கான பூர்வாங்க ஆராய்ச்சிகளும், அறிக்கைகளும் கூடத் தயாராகிக் கொண்டு வருகின்றன.

ஸ்பிக் தொழிற்சாலையின் மையமாக விளங்கும் ''யூரியா ரீ ஆக்டர், அமோனியா கன்வெர்டர்'' என்ற யந்திர உறுப்புக்கள் ஒவ்வொன்றும் முந்நூறு டன்கள், 320 டன்கள் எடையுள்ள கனிசமான இனங்கள். இவற்றை ஜப்பானிலிருந்து 'காஸ்மாஸ்' என்ற தனிக் கப்பலில் தருவித்தனர். தூத்துக்குடித் துறைமுகம் பெரியதல்ல. வசதிகள் இல்லாத இந்தச் சிறிய துறைமுகத்தில் கப்பல்கள் கரையோரம் வராது. ஆனால் முதல் தடவையாக இந்த ஜப்பானியக் கப்பலை மிக சாமர்த்தியமாக உள்ளே கொண்டு வந்து கரை சேர்த்து, யந்திர உறுப்புக்களை நேராகக் கரையிலேயே இறக்கினர். அவற்றை ஏற்றித் தொழிற்சாலை ஸ்தலத்துக்கு இழுத்துச் செல்ல 130 சக்கரங்கள் கொண்ட 'தனி ட்ரெய்லர்' வண்டி தயாரித்தனர். இது இத்தொழிற்சாலை வரலாற்றில் தனிச் சிறப்புப்பெற்ற சம்பவமாகும். கப்பல் வருவதற்குமுன், இரண்டு மாத காலத்துக்குப் பல நிபுணர்கள் காற்றின் வேகம், அலையின் வேகம், கடல் ஆழம் போன்ற பல விஷயங்களைத் துருவித் துருவி ஆராய்ந்து, திட்டம் போட்டுச் செயலாற்றி வெற்றி கண்டனர்.

ஸ்பிக் தொழிற்சாலை எப்போது உற்பத்தியைத் தொடங்கும் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? ஒவ்வொரு அலுவலகத்திலும், ''நினைவில் இருக்கட்டும். உற்பத்தி தொடங்க இன்னும் நூற்றி எண்பது நாட்கள்தான் இருக்கின்றன'' என்ற பலகை மாட்டப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு நாளும் எண்ணிக்கை குறைந்து கொண்டே வரும். கால கட்டம் தவறக்கூடாது என்பதில் அவ்வளவு கண்டிப்பு. செயலாற்றும் சுறுசுறுப்பைப் பார்த்தால், இந்தக் காலகெடுவுக்குச் சிறிது முன்னரேகூட உற்பத்தி ஆரம்பிக்கப்பட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

தொழிலாளர்கள், அதிகாரிகள் வசிப்பதற்கான ஸ்பிக் நகர் வளர்ந்து கொண்டு வரும் வேகமும், தொழிற்சாலை வளர்ச்சிக்கு இணையாகவே உள்ளது. வீடுகளோடு, ஆஸ்பத்திரி, பள்ளிக்கூடம், கோயில், கடைகள், பொழுதுபோக்குக்கான அரங்கங்கள், பூங்காக்கள் எல்லாமே உருவாகி வருகின்றன.

ஸ்பிக் உரச் சாலையும், ஸ்பிக் நகரமும், நமது மக்களுக்குப் புது நம்பிக்கையையும், உற்சாகத்தையும் அளிக்கும் சின்னங்கள்.

— எம். எஸ். சிவஸ்வாமி



# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 பிப்ரவரி, 22உ**

புதன்கிழமை : சிறையை விட்டு வெளியே போகுமுன் மேலும் மேலும் சலுகைகள் காட்டி, எங்களைக் கெடுத்து விடுவார்கள் போலிருக்கிறது! எங்களில் சிலருடைய நிறை குறைந்து விட்டபடியால் அப்படிப்பட்டவர்களுக்குத் தினந்தோறும் அரையாழாக்கு மோர் கொடுக்கப் போகிறார்கள். அதைப் பின்னால் காலணா மோராகக் குறைத்து விடலாம் என்றும் தெரிகிறது. அவர்கள் கொடுக்கும் மோர் வெறும் தண்ணீராகத்தான் இருக்கும். என்றாலும் வீட்டுச் சூழலே, வாடையை இங்கு கொணருமல்லவா?

இறுதியில் ஆந்திரர்கள் தாங்களே சமைத்துக் கொள்ள அனுமதி பெற்று விட்டார்கள். தினந்தோறும் காலையில் குடிக்கும் கஞ்சியைத் தவிர மற்ற உணவுகளையெல்லாம் சமையல் செய்து கொள்ளலாம் என்றும், ஆனால் ஆந்திரர்களுக்கு மட்டும் சமையல் செய்யலாமே தவிர மற்றக் கைதிகளுக்குச் சமையல் செய்யக் கூடாது என்றும் சிறைத் தலைமை அதிகாரி தம்மிடம் கூறியதாகத் திரு லட்சுமி நாராயணா அவர்கள் கூறினார்.

**1922 பிப்ரவரி, 24உ**

வெள்ளிக் கிழமை: மேற்கூறிய சமையல் விஷயத்தைத் திருப்திகரமாக முடித்து விட்டேன். திருவண்ணாமலைக் கைதிகள் உட்பட சகல ஒத்துழையாமைக் கைதிகளுக்கும் தனிச் சமையல் சௌகரியம் கிடைத்து விட்டது. அவர்கள் தயாரித்த குழம்பைச் சாப்பிட்டுச் சுவை பார்த்தேன். சாதாரணக் கைதிகளுக்கும் இதே அளவு மளிகைச் சாமான்கள் ஒதுக்கப் படுகிறது. அப்படியிருந்தும் அவர்களுக்குச் சிறை நிர்வாகம் தயாரித்தளிக்கும் குழம்பை விட இப்பொழுது ஒத்துழையாமைக் காரர்கள் செய்யும் குழம்பு இவ்வளவு சுவையாக இருக்க வேண்டிய காரணம் என்ன? ஏதோ திருட்டும் ஏமாற்றும் நடக்கிறதென்று தெரிகிறது. இது கைதிகளுக்கு எத்தனை பெரிய துன்பம்? யாரேனும் இந்த அநியாயத்தைத் தடுக்கக் கூடாதா? ஒத்துழையாமைக் காரர்கள் இதைவிட மிகப் பெரிய லட்சியத்தை நாடி நிற்பதால் அவர்கள் சிறை நிர்வாகத்தைச் சீர்திருத்தும் இந்தக் காரியத்தை மேற்கொள்ள முடியாது. சர்க்காருடன் ஒத்துழைக்கும் அரசியல் கட்சிக்காரர்களே இது விஷயத்தைக் கவனிக்க வேண்டும்.

''சகல தேசத்து வீரர்கள்'' என்ற வரிசையில் ''மார்கோலியாத்'' என்பவர் ''மகம்மது'' என்ற தலைப்பிட்டு நபி நாயகத்தின் ஜீவிய சரிதையை எழுதியிருக்கிறார். கிருஷ்ணசாமி வந்திருந்த போது அந்த நூலை ஒரு வேடிக்கையாகப் படித்துப் பார்க்கக் கொடுத்து விட்டுப்



போனான். அந்த நூலின் ஆசிரியர் நபி நாயகத்தைப் பற்றி எழுதியிருப்பது சற்றும் திருப்திகரமாக இல்லை.

நபிநாயகத்தை அதிக சாமர்த்தியமுடையவராகவும், அளவற்ற பதவி ஆசை உடையவராகவும் காட்டுகிறார். நபிநாயகம் அரசியல் நோக்கத்துடனேயே தம்முடைய மத போதனையைப் பரப்பி வந்ததாகவும் கூறுகிறார். தம்முடைய இலட்சியத்தை அடைவதற்கேற்ற சூழ்ச்சியாகவே தம்முடைய உபதேசத்தை சிருஷ்டித்துக் கொண்டாராம். அப்படியானால் அவரை நபி நாயகம் என்று கூறுவது எப்படி? அரசியல் தலைவர் என்றுதானே கூறவேண்டும்? தம்முடைய சொந்தச் செல்வாக்கை ஸ்தாபிப்பதற்காகவே நபி நாயகம் அல்லும் பகலும் அரும்பாடுபட்டதாக ஆசிரியர் கூறுகிறார். முஸ்லீம்கள் தான் மகமது நபியின் சரிதையைச் சிறப்பாக எழுத முடியும். முஸ்லிமல்லாதவர்கள் எழுத முடியாது. அப்படியிருக்க அந்த மதத்தினிடம் அணுவளவு கூட அனுதாபமில்லாதவர் நேர்மையான முறையில் எழுதவே முடியாதல்லவா?

"நான் ராபின் ப்ளூவைத்தான் உபயோகித்து வருகிறேன். காரணம், அது எப்பொழுதும் வெள்ளைத் துணி-உடைகளை மிகப் பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குகின்றது"

திருமதி ரேணு பி. ஏ. (ஆங்கிலத்தில் ஆனர்ஸ்)
நவீனகால குடும்பப் பெண்



## இதனை லட்சக் கணக்கான பிற குடும்பப் பெண்களும் ஒப்புக் கொள்ளுகின்றனர்




வெள்ளைத் துணி-உடைகளை, சோப்பு அல்லது டிடர்ஜெண்ட் கொண்டு வெளுக்கச் செய்வது மட்டும் போதாது. மிகப் பளிச்சிடும் தூயவெண்மை ஆக்குவதற்கு அவற்றை ராபின் ப்ளூவில் மூழ்கச் செய்தெடுக்க வேண்டும். ஒரு வாளி தண்ணீரில் ஒரு சிட்டிகை ராபின் ப்ளூ அற்புதமாக வேலை செய்யும்

# ராபின் ப்ளூ

வெள்ளைத் துணி-உடைகளை மிகப் பளிச்சிடும் தூய வெண்மையாக சுத்தம் செய்கின்றது.

ARBC-36 TAM



# சிவகாமியின் சபதம்

பதினோராம் அத்தியாயம்

## ஆயனச் சிற்பி

**வா**னளாவி வளர்ந்திருந்த மரங்களின் கிளைகள் நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் பரவிப் பின்னிக் கொண்டிருந்த வனப் பிரதேசத்தின் மத்தியில் அழகான சிற்ப வீடு ஒன்று காணப்பட்டது.

மனோகரமான காலை நேரம். சூரியோதயமாகி ஒரு ஜாமம் இருக்கும். ஓங்கி வளர்ந்திருந்த மரங்களின் உச்சியில் அலைந்த காலத்தின் இளந்தென்றல் உலாவியபோது, 'சல சல' வென்று இலைகள் அசையும் இனிய ஓசை எழுந்தது.

பட்சி ஜாலங்களின் கண்டங்களிலிருந்து விதம் விதமான சுருதி பேதங்களுடன் மதுர மதுரமான அமுத கீதங்கள் பெருகிக் கொண்டிருந்தன.

வீட்டைச் சுற்றியிருந்த மரங்களின் அடியில் ஆங்காங்கே பெரிய பெரிய கருங்கற்கள் கிடந்தன. அந்தக் கருங்கற்களில், தனித்தனியாகவும் இருவர் மூவராகவும் இளம் சிற்பிகள் அமர்ந்து கையில் கல்லுளியுடன் வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

இளம் சிற்பிகள் கருங்கற்களில் கல்லுளியினால் வேலை செய்தபோது உண்டான 'கல் கல்' என்ற ஓசை, இலைகள் அசையும் ஓசையுடனும் பட்சிகளின் மதுர கானத்துடனும் கலந்து, செவி கொடுத்துக் கேட்பவர்களுக்கெல்லாம் நாத போதையை உண்டாக்கிற்று.

அமரர்
**கல்கி**

இத்தகைய கீதப் பிரவாகத்துக்கிடையே, திடீரென்று வீட்டுக்குள்ளிருந்து 'ஜல் ஜல்' என்ற சத்தம் வந்தது.

இளம் சிற்பிகள் அவ்வளவு பேரும் சொல்லி வைத்தாற்போல் வேலையை நிறுத்திவிட்டுக் காது கொடுத்துக் கேட்டார்கள். அவர்களுடைய முகங்கள் எல்லாம் ஏககாலத்தில் மலர்ந்தன.

ஏனெனில், அந்த 'ஜல் ஜல்' ஒலியானது, அவர்களுடைய ஆச்சாரிய சிற்பியின் மகள் சிவகாமி தேவியின் பாதச் சலங்கை ஒலியென்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். மூன்று நாட்களாக ஏதோ ஒரு காரணத்தினால் சோகத்தில் ஆழ்ந்திருந்த சிவகாமி இன்றைக்குச் சோகம் நீங்கி மீண்டும் நடனம் செய்ய ஆரம்பித்திருக்கிறாள் என்பதை அந்த 'ஜல் ஜல்' ஒலி பறையறைந்து தெரிவித்தது.

சற்று நேரம் அந்த இனிய ஒலியைக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, ஒருவரோடொருவர் முக பாவத்தினாலேயே சம்பாஷித்துவிட்டு, இளம் சிற்பிகள் மறுபடியும் தங்கள் வேலையை ஆரம்பித்தார்கள்.

ஆயனரின் சிற்பக் கோயிலுக்குள்ளே நாம் பிரவேசிப்பதற்கு முன்னால், அவர் அந்த நடுக் காட்டில் வந்து வீடு கட்டிக் கொண்டு வசிக்க நேர்ந்தது ஏன் என்பதைச் சிறிது கவனிப்போம்.

* * *

தெற்கே பாண்டிய நாட்டின் எல்லையிலிருந்து வடக்கே கிருஷ்ணா நதி வரையில் பரந்திருந்த பல்லவ ராஜ்யத்தில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு மகேந்திர வர்ம சக்கரவர்த்தி சிறப்புடன் ஆட்சி புரிந்து கொண்டிருந்த காலத்தில், தமிழகமெங்கும் ஓர் அதிசயமான 'கலை மறுமலர்ச்சி' ஏற்பட்டிருந்தது.

செந்தமிழ் நாடெங்கும் மகாசிற்பிகளும் சித்திரக் கலைஞர்களும் தோன்றிச் சிற்ப, சித்திரக் கலைகளை அற்புதமாக வளர்த்து வந்தார்கள். குன்றுகளைக் குடைந்து கோயில்களாக்கும் கலையும், கற்பாறைகளிலே சிற்பங்களைச் செதுக்கும் கலையும் எங்கெங்கும் பரவி வந்தன.

அதே சமயத்தில் தெய்வத் தமிழகத்தில் சைவ, வைஷ்ணவ சமயங்கள் புத்துயிர் பெற்றுத் தழைக்கத் தொடங்கின. சிவனடியார்களும், வைஷ்ணவப் பெரியார்களும் ஸ்தல யாத்திரை என்ற வியாஜத்தில் தேசமெங்கும் பிரயாணம் செய்து, சைவ, வைஷ்ணவ சமயங்களைப் பரப்பி வந்தார்கள்.

இது காரணமாகத் தமிழகத்தில் சென்ற சில நூற்றாண்டு காலமாய் வேரூன்றியிருந்த புத்த, சமண சமயங்களுக்கும், சைவ, வைஷ்ணவ சமயங்களுக்கும் தீவிரப் போட்டி ஏற்பட்டது. அந்தந்தச் சமயத் தத்துவங்களைப் பற்றிய விவாதங்கள் எங்கே பார்த்தாலும் காரசாரமாக நடந்து கொண்டிருந்தன.

மேற்படி சமயப் போட்டியானது கலைத் துறையில் மிகுதியாகக் காணப்பட்டது. ஒவ்வொரு சமயத்தினரும்



தங்கள் தங்கள் சமயத்தையொட்டிக் கலைகளை வளர்க்க முயன்றூர்கள்.

சைவ, வைஷ்ணவர்கள் சிவன் கோயில்களையும், பெருமாள் கோயில்களையும் நாடெங்கும் நிர்மாணிக்க விரும்பினூர்கள். புத்தர்களும் சமணர்களும் எங்கெங்கும் புத்த விஹாரங்களையும் சமணப் பள்ளிகளையும் நிறுவத் தொடங்கினூர்கள்.

பாறைகளுக்கும் குன்றுகளுக்குங்கூடப் பெரிய போட்டி ஏற்பட்டது! ஒவ்வொரு மதத்தினரும், ''இது எங்கள் குன்று; எங்கள் பாறை!'' என்று பாத்தியதை கொண்டாடினூர்கள். அந்தப் பாறைகளையும் குன்றுகளையும் குடைந்து கோயில்களையும் விஹாரங்களையும் நிர்மாணிக்கும் ஆசையினுல்தான் அத்தகைய போட்டி உண்டாயிற்று.

அதே மாதிரி சிற்பிகள், சித்திரக் கலைஞர்களின் விஷயத்திலும் பலமான போட்டி ஏற்பட்டிருந்தது. பெயர் பெற்ற சிற்பிகளிடமும் சித்திரக் கலைஞர்களிடமும் நாலு மதத்தினரும் வந்து மன்றூடி அழைத்தார்கள்.

அத்தகைய பலமான போட்டிக்கு ஆளாகியிருந்தவர்களில் ஆயனச் சிற்பியும் ஒருவர்.



காஞ்சிமா நகரில் பிறந்து வளர்ந்து கலை பயின்ற ஆயனர், இளம் பிராயத்திலேயே 'மகா சிற்பி' என்று பெயர் பெற்றுவிட்டார். ஆயனருடைய புகழ் வளர வளர, அவருடைய வேலைக்குக் குந்தகம் அதிகமாக ஏற்பட்டுக் கொண்டிருந்தது. மகேந்திரச் சக்கரவர்த்தி முதல் சாதாரண ஜனங்கள் வரையில் அடிக்கடி அவருடைய விடுதிக்கு வருவதும், அவருடைய சிற்ப வேலைகளைப் பாராட்டுவதுமாயிருந்தார்கள். வந்தவர்களை வரவேற்று உபசரிப்பதிலேயே அவருடைய காலம் அதிகமாகச் செலவழிந்து வந்தது.

சைவ குலத்தில் பிறந்த ஆயனர் இயற்கையாகச் சைவ மதப் பற்றுக்



கொண்டிருந்தார். அதோடு, பழந் தமிழ் நாட்டுச் சிற்ப வடிவங்களில் சிறந்த ஸ்ரீ நடராஜ வடிவம் அவருடைய உள்ளத்தைப் பூரணமாய்க் கவர்ந்திருந்தது. எனவே, அவருடைய சிற்ப வேலைகள் பெரும்பாலும் சைவ மதத்தைத் தழுவியனவாக இருந்தன. இது காரணமாக, புத்த பிக்ஷுக்களும் சமண முனிவர்களும் ஆயனரைத் தங்கள் தங்கள் சமயத்தில் சேர்த்துக் கொள்ள இடைவிடாத முயற்சி செய்தவண்ணம் இருந்தார்கள்.

இந்தத் தொல்லையிலிருந்து விடுபடுவதற்காக, ஆயனச் சிற்பியார் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். அதாவது, காஞ்சி நகரை விட்டுச் சென்று எங்கேயாவது நடுக்காட்டில் ஏகாந்தமான பிரதேசத்தில் வீடு அமைத்துக் கொண்டு வசிக்க வேண்டும் என்பதுதான்.

அவ்விதம் ஆயனர் தீர்மானித்ததற்கு இன்னொரு முக்கியமான காரணமும் இருந்தது. அந்த மகா சிற்பி, சிற்ப சித்திரக் கலைகளை நன்கு பயின்றிருந்ததோடு, பரத சாஸ்திரம் என்னும் மகா சமுத்திரத்தையும் கரை கண்டவராக இருந்தார்.

அவருடைய ஏக புதல்வி சிவகாமி குழந்தையாயிருந்த போதே நடனக் கலையில் அவள் சிறந்த தேர்ச்சி அடைவாள் என்பதற்கு அறிகுறிகள் காணப்பட்டன.

ஆயனருடைய உள்ளத்தில் ஒரு பெரிய ஆசை உதயமாயிற்று.

'குழந்தை சிவகாமிக்குப் பரத நாட்டியக் கலையில் பயிற்சி அளிக்க வேண்டும்; அவளுடைய நடனத் தோற்றங்களைப் பார்த்து அவற்றைப் போல் ஜீவ களையுள்ள நவநவமான நடன வடிவங்களைச் சிலைகளிலே அமைக்க வேண்டும்' என்னும் மனோரதம் அவருக்கு உண்டாகி, நாளுக்கு நாள் வலுப்பெற்று வந்தது. நகரத்தை விட்டு எங்கேயாவது ஏகாந்தமான பிரதேசத்துக்குப் போனாலொழிய மேற்படி மனோரதம் நிறைவேறுவது சாத்தியமாகாது என்பதையும் அவர் நன்கு உணர்ந்தார்.

ஆயனர் தமது விருப்பத்தை மகேந்திர சக்கரவர்த்தியிடம் விண்ணப்பித்துக் கொண்ட போது, கலைஞர்களுடைய விசித்திர குணாதிசயங்களை நன்கு அறிந்தவரான மகேந்திர பல்லவர் உடனே அவருடைய யோசனைக்குச் சம்மதம் அளித்தார். அதற்கு வேண்டிய சௌகரியங்களையும் செய்து கொடுக்க முன்வந்தார்.

* * *

காஞ்சியிலிருந்து ஒரு காத தூரத்தில், ராஜபாட்டையிலிருந்து விலகியிருந்த அடர்ந்த வனப் பிரதேசம் ஒன்றை ஆயனர் தேர்ந்தெடுத்து, அங்கே வீடு கட்டிக் கொண்டு, குழந்தை சிவகாமியுடனும், பதியை இழந்திருந்த தம் தமக்கையுடனும் வசிக்கலானார்.

எந்த நோக்கத்துடன் ஆயனர் அந்த ஏகாந்தமான பிரதேசத்தைத் தேடி வந்தாரோ, அந்த நோக்கம் சில அம்சங்களில் நன்கு நிறைவேறி வந்தது. சிவகாமி நாட்டியக் கலையில் நாளுக்கு நாள் தேர்ச்சி அடைந்து வந்தாள். அவ

ளுடைய நடனத் தோற்றங்களைப் பார்த்து ஆயனர் முதலில் அவை போன்ற சித்திரங்கள் வரைந்துகொண் டார். பிறகு அந்தச் சித்திரங்களைப் போலவே அதிசயமான ஜீவ களை பொருந்திய நடன உருவங்களைக் கல்லிலே அமைக்கலானார்.

ஆயனர் ஏகாந்தமான பிரதேசத் துக்குப் போனபோதிலும் வெளி உலகம் அவரை அடியோடு தனியாக விட்டுவிடவில்லை.

கலைஞர்களும், கலைகளில் பற்றுடைய வர்களும் காட்டு வழிகளிலே புகுந்து ஆயனர் வீட்டை அடிக்கடி தேடிச் சென் றார்கள். அவ்வாறு சென்றவர்களில் முக்கியமானவர்கள் மகேந்திரச் சக்கர வர்த்தியும் அவருடைய குமாரர் மாமல்லருந்தான்.

இவர்கள் ஆயனர் வீடு செல்லுவ தற்கு ஒரு முக்கியமான முகாந்தரமும் இருந்தது.

சக்கரவர்த்தியும் மாமல்லரும் ஒரு நாள் கடல் மல்லைத் துறைமுகத்துக்குச் சென்றிருந்தபோது, கடற்கரையோர மாகப் பரந்து கிடந்த குன்றுகளும், பாறைகளும் அவர்களுடைய கவனத் தைக் கவர்ந்தன. அந்தக் குன்றுகளி லும் பாறைகளிலும் விதம் விதமான சிற்ப வேலைகளைச் செய்து கடல் மல்லைத் தலத்தை ஒரு சொப்பன லோகமாகச் செய்துவிட வேண்டுமென்று அவர்கள் தீர்மானித்தார்கள்.

தமிழகமெங்குமிருந்து ஆயிரக்கணக் கான சிற்பிகள் அங்கு வந்து வேலை செய்யத் தொடங்கினார்கள்.

இந்த வேலைகள் சம்பந்தமாக ஆயன ரிடம் கலந்து ஆலோசிப்பதற்கும், அவ் வப்போது அவரை அழைத்துச் சென்று நடந்திருக்கும் வேலைகளைக் காட்டுவ தற்குமாகச் சக்கரவர்த்தியும் மாமல்ல ரும் அவருடைய வீட்டுக்கு அடிக்கடி வர வேண்டியிருந்தது. அப்படி வரும்போ தெல்லாம் ஆயனரின் நடனச் சிற்பங் களைப் பார்த்து அவர்கள் பாராட்டிய துடன், சிவகாமியை நடனமாடச் சொல்லியும் பார்த்து மகிழ்ந்தார்கள்.

சிவகாமி மங்கைப் பருவத்தை அடைந்து நடனக் கலையில் ஒப்பற்ற தேர்ச்சியும் அடைந்த பிறகு, காஞ்சி ராஜ சபையில் அவளுடைய நடன அரங்கேற்றத்தை நடத்த வேண்டும் என்று சக்கரவர்த்தி ஆக்ஞாபித்தார்.

அந்த அரங்கேற்றம் எப்படி இடை யில் தடைப்பட்டுப் போயிற்று என் பதை இந்த வரலாற்றின் ஆரம்ப அத்தி யாயங்களில் பார்த்தோம்.

பன்னிரண்டாம் அத்தியாயம்

## தெய்வமாக் கலை

அரண்ய மத்தியில் அமைந்த ஆய னர் வீட்டின் உட்புறம் கண்கொள் ளாக் காட்சியளித்தது.

வெளித் தாழ்வாரத்தையும் முன் வாசற்படியையும் தாண்டி உள்ளே சென்றதும், நாற்புறமும் அகன்ற கூடங்களும், நடுவில் விசாலமான முற்றமாக அமைந்த பெரிய மண்டப மும் காணப்பட்டன. முற்றத்துக்கு மேலே மண்டபம் எடுப்பாகத் தூக்கிக் கட்டப்பட்டிருந்தது. கூடங்களின் ஓரங் களில் சிற்ப வேலைப்பாடு அமைந்த தூண்கள் நின்றன. அவை மேல் மண்ட பத்தைத் தாங்குவதற்காக நின்றனவோ



அல்லது அலங்காரத்துக்காக நின்ற னவோ என்று சொல்ல முடியாமல் இருந்தது.

நாற்புறத்துச் சுவர்களிலும் விதவித மான வர்ணங்களில் அழகழகான சித் திரங்கள் காணப்பட்டன. அந்தச் சித்திரங்களில் ஸ்ரீ நடராஜ மூர்த்தி யின் நாதாந்த நடனம், தாண்டவ நடனம், குஞ்சித நடனம், ஊர்த்வ நடனம் ஆகிய தோற்றங்கள் அதிகமாக இருந்தன. அம்மாதிரியே ஓர் அழகிய இளம் பெண்ணின் பலவகை அபிநய நடனத் தோற்றங்களும் அதிகமாகக் காட்சி அளித்தன.

முற்றத்தில் பெரிய கருங்கற்களும், உடைத்த கருங்கற்களும், பாதி வேலை

செய்யப்பெற்ற கருங்கற்களும் கிடந்தன. ஒரு பக்கத்துக் கூடத்தில் வேலை பூரணமாகி ஜீவ களையுடன் விளங்கிய சிலைகள் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. சித்திரங்களில் தோன்றிய அதே இளம் பெண்ணின் மோகன வடிவந்தான் அந்தச் சிலைகளிலும் விளங்கியது. ஒவ்வொரு சிலையும் பரத சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் நூற்றெட்டு அபிநயத் தோற்றங்களில் ஒன்றைக் குறிப்பிடுவதாயிருந்தது.

ஆனால், நாம் குறிப்பிடும் சமயத்தில் அந்தச் சிற்ப மண்டபத்துக்குள் பிரவேசிப்பவர்கள் மேற்கூறிய சிற்ப அதிசயங்களையெல்லாம் கவனம் செலுத்திப் பார்த்திருக்க முடியாது. அவர்களுடைய கருத்தையும் கண்களையும் அம்மண்டபத்தின் ஒரு பக்கத்துக் கூடத்தில் தோன்றிய காட்சி பூரணமாகக் கவர்ந்திருக்கும்.

சித்திரங்களிலும் சிலைகளிலும் தோற்றம் அளித்த இளம் பெண்ணானவள்



அங்கே சுயமாகவே தோன்றி, கால் சதங்கை 'கலீர் கலீர்' என்று சப்திக்க நடனமாடிக் கொண்டிருந்தாள். அவளுக்கெதிரே சற்றுத் தூரத்தில் ஆயனச் சிற்பியார் உட்கார்ந்து கண்கொட்டாத ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்.

பார்த்துக் கொண்டிருந்தவர் திடீரென்று "நில்!" என்றார். அந்த க்ஷணமே சிவகாமியும் ஆட்டத்தை நிறுத்தி, அப்போது நின்ற நிலையிலேயே அசையாமல் நின்றாள்.

ஆயனர் கையில் கல்லுளியை எடுத்தார். அவர் அருகில் ஏறக்குறைய வேலை பரிபூரணமான ஒரு சிலை கிடந்தது. அதன் கண் புருவத்தின் அருகே ஆயனர் கல்லுளியை வைத்து இலேசாகத் தட்டினார். மறுபடியும் சிவகாமியை நிமிர்ந்து பார்த்து, "சற்று இரு, அம்மா!" என்று கூறி, மேலும் அச்சிலையின் புருவங்களில் சிறிது வேலை செய்தார். பிறகு "போதும், குழந்தாய்! இங்கே வந்து உட்கார்!" என்றார்.

சிவகாமி ஆயனர் அருகில் சென்று உட்கார்ந்தாள். அவள் முகத்தில் முத்து முத்தாகத் துளித்திருந்த வியர்வையை ஆயனர் தம் அங்கவஸ்திரத்தினால் துடைத்து விட்டு, "அம்மா, சிவகாமி! பரத சாஸ்திரத்தை எழுதினாரே, அந்த மகா முனிவர் இப்போது இருந்தால் உன்னிடம் வந்து அபிநயக் கலையின் நுட்பங்களைக் கற்றுக் கொள்ள வேண்டியதாயிருக்கும். கண் பார்வையிலும், புருவத்தின் நெறிப்பிலும் என்ன அற்புதமாய் நீ மனோபாவங்களைக் கொண்டு வந்துவிடுகிறாய்? நடனக் கலைக்காகவே நீ பிறந்தவள்!" என்றார்.

"போதும் அப்பா, போதும். எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை!" என்று அலுப்பான குரலில் கூறினாள் சிவகாமி.

"பிடிக்கவில்லையா? என்ன பிடிக்கவில்லை?" என்று ஆயனர் வியப்புடன் கேட்டார்.

"நான் பெண் பிறந்ததே பிடிக்கவில்லை" என்றாள் சிவகாமி.

"சிவகாமி! இது என்ன இது? மூன்று நாட்களாகத்தான் உடம்பு நன்றாக இல்லை என்று சொன்னாய். இன்றைக்கு ஏன் இத்தனை வெறுப்பாய்ப் பேசுகிறாய்? என் பேரில் ஏதாவது கோபமா?" என்று ஆயனர் பரிவுடன் கேட்டார்.

"உங்கள் பேரில் எனக்கு என்ன கோபம், அப்பா! பரத சாஸ்திரம் என்று ஒன்றை எழுதினாரே, அந்த முனிவரின் பேரில்தான் கோபம். எதற்காக இந்தக் கலையைக் கற்றுக் கொண்டோம் என்றிருக்கிறது" என்று கூறிப் பெருமூச்சு விட்டாள் சிவகாமி.

"ஆகா! என்ன வார்த்தை சொன்னாய்? பரத முனிவரின் பேரில் கோபமா? சிவகாமி! நிருத்திய கலையில் நீ அபூர்வமான தேர்ச்சி அடைந்திருக்கிறாய். ஆனால் அந்தக் கலையின் பெருமையை நீ உணரவில்லை. நிருத்தியக் கலைதான் மற்ற எல்லாக் கலைகளுக்கும் அடிப்படை... சிவகாமி! அதனாலேதான் இதைத் தெய்வமாக் கலை என்றும், பிரம்ம தேவர் பரத முனிவருக்கு அருளிய 'நாட்டிய வேதம்' என்றும் சொல்கிறார்கள். நிருத்தியக் கலையிலிருந்துதான் சித்திரக் கலை உண்டாயிற்று. அதிலிருந்துதான் சிற்பக் கலை வளர்ந்தது. இசைக் கலைக்கும் நிருத்தியக் கலைதான் ஆதாரம். பரத

சாஸ்திரம் அறியாதவர்கள் சங்கீதத்தின் ஜீவ தத்துவத்தை அறிய முடியாது, அம்மா! அன்றைக்கு ருத்ராச்சாரியாரே இதை ஒப்புக் கொண்டு விட்டார்....."

"யார் ருத்திராச்சாரியார்? சக்கரவர்த்திக்குப் பக்கத்தில் பெரிய வெள்ளைத் தாடியோடு உட்கார்ந்திருந்தாரே, அவரா?"

"ஆம்; அவர்தான். நம் மகேந்திர சக்கரவர்த்தியின் சங்கீத ஆசிரியர். சங்கீதத்தைப் பற்றிச் சாஸ்திரம் எழுதியிருக்கிறார். இப்போது கிழவருக்கு வயது அதிகமாகி விட்டது. இருந்தாலும் தடியை ஊன்றிக் கொண்டு உன்னுடைய அரங்கேற்றத்துக்கு வந்திருந்தார். உன்னுடைய ஆட்டத்தைப் பார்த்துப் பிரமித்துப் போய்விட்டார். சபை கலைந்தவுடனே அவர் என்னைக் கூப்பிட்டு, 'உன் மகள் நன்றாயிருக்க வேண்டும். அவள்தான் இன்று என் குருட்டுக் கண்களைத் திறந்து ஒரு முக்கியமான உண்மையை உணரச் செய்தாள். நான் சங்கீத சாஸ்திரம் எழுதியிருக்கிறேனே, அதெல்லாம் சுத்தத் தவறு. பரத சாஸ்திரம் பயிலாமல் நான் சங்கீதத்தைப் பற்றி எழுதியதே பெரும் பிசகு!' என்று சொன்னார். சங்கீத மகா சாகரமாகிய ருத்ராச்சாரியாரே இவ்வாறு சொல்கிறதென்றால்...."

"அப்பா! யார் என்ன சொன்னால் என்ன? எனக்கு என்னமோ ஒன்றும் பிடிக்கவில்லை. பரதம், சங்கீதம், சிற்பம், சித்திரம் — இவற்றினால் எல்லாம் உண்மையில் என்ன பிரயோஜனம்?"

"சிவகாமி! நீதானா கேட்கிறாய், கலைகளினால் என்ன பிரயோஜனம் என்று? மகளே! நான் கேட்கிறதற்கு விடை சொல்! வஸந்த காலத்தில் மரங்களும் செடிகளும் பூத்துக் குலுங்குவதனால் என்ன பிரயோஜனம்? பௌர்ணமி இரவில் பூரண சந்திரன் பால் நிலவைப் பொழிகிறதே, அதனால் என்ன உபயோகம்? மயில் ஆடுவதனாலும், குயில் பாடுவதனாலும் யாது பயன்? கலைகளின் பயனும் அவை போன்றதுதான். கலைகளைப் பயில்வதிலேயே ஆனந்தம் இருக்கிறது. அந்த ஆனந்தத்தை நீ அனுபவித்ததில்லையா? இன்றைக்கு ஏன் இப்படிப் பேசுகிறாய் அம்மா?"

சிவகாமி மறுமொழி சொல்லாமல் எங்கேயோ பார்த்த வண்ணம் இருந்தாள். காதளவு நீண்ட அவளுடைய கரிய கண்களில் முத்துப்போல் இரு கண்ணீர்த் துளிகள் துளித்து நின்றன.

இதைப் பார்த்த ஆயனர் திடுக்கிட்டவராய்ச் சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு, சிவகாமியின் கூந்தலை அருமையுடன் தடவிக் கொடுத்த வண்ணம் கூறினார்:

"அம்மா! எனக்குத் தெரிந்தது. உன்னை அறியாப் பிராயத்துச் சிறு குழந்தையாகவே நான் இன்னமும் எண்ணிக்கொண்டிருக்கிறேன். அது தவறுதான். உனக்குப் பிராயம் வந்து உலகம் தெரிந்து விட்டது. உன்னை ஒத்த



பெண்கள் கல்யாணம் செய்துகொண்டு குடியும் குடித்தனமுமாய் வாழ்கிறார்கள் என்பதைப் பார்த்திருக்கிறாய். உன் அன்னை உயிரோடு இருந்திருந்தால், இத்தனை நாட்களும் உனக்குக் கல்யாணம் செய்து வைக்கும்படி என் பிராணனை வாங்கியிருப்பாள். ஆனால், நானும் அந்தக் கடமையை மறந்து விடவில்லை, சிவகாமி! பரத சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் நூற்றெட்டு அபிநயத் தோற்றங்களில் நாற்பத்தெட்டு தோற்

றங்களைச் சிலைகளில் அமைத்துவிட்டேன். இன்னும் அறுபது சிலைகள் அமைத்த வுடனே, உனக்குத் தக்க மணாளனைத் தேடிக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டு மறு காரியம் பார்ப்பேன்!''

இவ்விதம் ஆயனர் சொன்னபோது சிவகாமி கண்களைத் துடைத்துக் கொண்டு, அவரை நிமிர்ந்து பார்த்து. ''கல்யாணப் பேச்சை எடுக்க வேண்டாம் என்று எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன், அப்பா! எனக்குக் கல்யாணமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். உங்களைத் தனியாக விட்டு விட்டு நான் போவேனா? அத்தகைய கிராதகி அல்ல நான்!'' என்றாள்.

உண்மை என்னவென்றால், சிவகாமியைக் கல்யாணம் பண்ணிக் கொடுப்பதில் ஆயனருக்கு அந்தரங்கத்தில் விருப்பம் இடையாது. குழந்தைப் பிராயத்திலிருந்து அவளைக் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்தவர் அவர். கல்வியும் கலையும் பயில்வித்தவர் அவர். பெண்ணை விட்டுப் பிரிந்து ஒரு நிமிஷங்கூடத் தாம் உயிர் வாழ முடியாது என்று ஆயனர் எண்ணினார். ஆனாலும் என்றைக்காவது ஒருநாள் அவளைக் கல்யாணம் செய்து கொடுத்துத்தானே ஆகவேண்டும் என்னும் நினைவு அடிக்கடி அவர் மனத்தில் உறுத்திக் கொண்டிருந்தது.

எனவே, சிவகாமியின் கல்யாணத்தைப் பற்றி அவர் சில சமயம் பிரஸ்தாபிப்பது உண்டு. அப்போதெல்லாம் சிவகாமி, ''எனக்குக் கல்யாணம் வேண்டாம்'' என்று மறுமொழி கூறுவதைக் கேட்பதில் அவருக்கு மிகவும் ஆனந்தம்.

இன்றைக்கும் சிவகாமியின் மறுமொழி ஆயனருக்கு ஆறுதலை அளித்தது. எனினும் அவர் மேலும் தொடர்ந்தார்: ''அதெப்படி, சிவகாமி! மணம் செய்து கொடுக்காமலே நான் உன்னை என் வீட்டிலேயே வைத்துக் கொண்டிருந்தால் நன்றாயிருக்குமா? உலகம் ஒப்புக்கொள்ளுமா? ஒரு தகுந்த பிள்ளையாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டியதுதான். ஆனால், இந்த யுத்தம் ஒன்று வந்து தொலைத்திருக்கிறது. இதனால் நம் குமார சக்கரவர்த்தியின் திருமணம் கூடத் தடைப்படும் போலிருக்கிறது....''

சிவகாமியின் முகத்தில் அப்போது ஓர் அதிசயமான மாறுதல் காணப்பட்டது. ஆங்காரத்தினால் ஏற்பட்ட கிளர்ச்சி அந்த அழகிய முகத்தை இன்னும் அழகுபடுத்தியது.

'' என்ன அப்பா சொல்கிறீர்கள்? யாருக்குத் திருமணம்? குமார சக்கரவர்த்திக்கா?'' என்றாள்.

''ஆமாம்; மாமல்லருக்கு இந்த ஆண்டில் திருமணம் நடத்த வேண்டும் என்று மகாராணிக்கு மிகவும் ஆசையாம். யுத்தம் முடிந்த பிறகுதான் கல்யாணம் என்று சக்கரவர்த்தி சொல்லி விட்டாராம். இதனால் புவன மகாதேவிக்கு மிகுந்த வருத்தம் என்று கேள்வி.''

சிவகாமி குரோதம் ததும்பிய குரலில், ''அப்பா! யார் வேணுமானாலும் கல்யாணம் செய்து கொள்ளட்டும். அல்லது, செய்துகொள்ளாமல் இருக்கட்டும். நான் என்னவோ கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை'' என்றாள்.

ஆயனர் மீண்டும், ''அது எப்படி முடியும், சிவகாமி! சைவ குலத்துப் பெண்ணை மணம் செய்து கொடுக்காமல் எப்படி வைத்திருக்கலாம்? நாலு பேர் கேட்டால், நான் என்ன சொல்லுவது?'' என்றார்.

''அப்பா! நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் புத்த மதத்தைச் சேர்ந்து பிக்ஷுணியாகி விடுகிறேன். அப்போது உங்களை ஒருவரும் ஒன்றும் கேட்க மாட்டார்கள்'' என்றாள் சிவகாமி.

அவள் இவ்விதம் சொல்லி வாய் மூடிய அதே சமயத்தில், வாசற்புறத்தில் **'புத்தம் சரணம் கச்சாமி'** என்ற குரல் கேட்டது.

இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். வாசற்படிக்கு அருகில் நாகநந்தி அடிகளும் பரஞ்சோதியும் நின்று கொண்டிருந்தார்கள். (தொடரும்)

**இன்ஸ்பெக்டர் விக்ரம் 6**

கதை: அபித் சூர்தி

படம்: பிரதாப்முல்லிக்
























(இந்த 'மஞ்சரி' கதையை எழுதிய திரு கே. சிவகுமார் எலெக்ட்ரானிக்ஸ் கம்யூனிகேஷன் இன்ஜினியர். திருச்சியைச் சேர்ந்தவர். நாடக உலகுக்கு இவர் அதிகம் பரிச்சயமானவர். அகில இந்திய வானொலியிலும், பொது மேடையிலும் கடந்த ஐந்து வருடங்களாகப் பல நாடகங்களை எழுதித் தயாரித்து அளித்திருக்கிறார். பத்திரிகை உலகை இதுவரையில் எட்டி நின்றே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த இவர் 'மஞ்சரி' தம்பப்பில் ஆரம்பித்திருக்கும் புதுமையான இந்தத் தொடரை மிகவும் ரசித்தவராகப் பங்கு கொண்டிருக்கிறார்.)

# கமலினிக்கு என்ன நேர்ந்தது?

சிவகுமார்

**வா**சலில் ஜீப் ஒரு குலுக்கலுடன் வந்து நின்றது. தலையை உயர்த்திப் பார்த்த ராமபத்திரன், புத்தகத்தை மூடி வைத்துவிட்டு எழுந்து நின்றார். ஜீப்பிலிருந்து ஓர் இன்ஸ்பெக்டர் இறங்கி வந்தார். 'இரவு பத்தரை மணியாகப் போகிறதே! இந்த நேரத்தில் இவருக்கு இங்கு என்ன வேலை?' என்ற கேள்வி ராமபத்திரன் நெஞ்சில் எழுந்தது.



அவரை நெருங்கிய இன்ஸ்பெக்டர் தாமே பேசலானார்.

''இந்த அகால நேரத்தில் உங்களுக்குத் தொந்தரவு தருவதற்கு மன்னிக்க வேண்டும். இதுதானே மிஸ்டர் ராமபத்திரன் வீடு ?''

''ஆமாம் ! என்ன விஷயம் இன்ஸ்பெக்டர் ?'' என்று கேட்டார் ராமபத்திரன். அவரை நிமிர்ந்து நன்கு பார்த்த இன்ஸ்பெக்டர் ''உட்கார்ந்து பேசலாமா?'' என்றார்.

சிறிது தயக்கத்துக்குப்பின், ''தாராளமாக'' என்றவாறு திரும்பினார் ராமபத்திரன்.

வாசலில் யாரோ பேசிக் கொண்டிருப்பதைக் கேட்ட ஜானகி வெளியே வந்து எட்டிப் பார்த்தாள். இன்ஸ்பெக்டரைக் கண்டதும் அவளுக்கு அடிவயிற்றில் 'சொரேர்' என்றது. ஒரு போலீஸ்காரர் தம் வீட்டைத் தேடி வருவது இதுவே முதல் தடவை என்பதுதான் அவளது கலக்கத்துக்குக் காரணம். மனைவியைப் பார்த்துக் கொண்டே, ''வாருங்கள், இன்ஸ்பெக்டர்'' என்று ராமபத்திரன், அவரை உள்ளே அழைத்துச் சென்று ஹாலில், சோபாவில் அமரச் செய்து தாமும் எதிரே அமர்ந்தார்.

''இன்றைக்கு இரவு சுமார் எட்டு மணிக்கு அரசினர் கலைக் கல்லூரியில் ஒரு சம்பவம்.... அதாவது உங்க....''

''அதாவது என் புதல்வன் ராஜாவும், பெண் கமலினியும் படிக்கிற கல்லூரி!''

''ரொம்ப சரி!''



''நாலு ஹாஸ்டல் மாணவிகள் இன்னைக்கு மாலை எங்கேயோ வெளியில் கடைகளுக்குப் போய்விட்டு ஒரு டாக்ஸியில் ஹாஸ்டலுக்குத் திரும்பியிருக்காங்க.... அப்ப ஹாஸ்டல் காம்பவுண்டுகிட்டே நாலைஞ்சு மாணவர்கள் அந்த டாக்ஸியை வழிமறிச்சு அந்த மாணவிகளை.....''

''ஓ ! எனக்குப் புரிகிறது ! டீன் ஏஜ்.... டீன் ஏஜ்.......!''

''அந்த டாக்ஸி டிரைவர் கொஞ்சம் பாதுகாப்புக்கு முயற்சி செஞ்சிருக்கான்.... ஆனால் மாணவர்கள் ஓர் இரும்புக் கழியினாலே அவனைத் தாக்கியிருக்காங்க.... அவனை ஆஸ்பத்திரியில் 'அட்மிட்' பண்ணியிருக்கோம். அதற்குள்ளே மாணவர்கள் சத்தம் போட்டதிலே யார் யாரோ ஓடி வர.... மாணவர்கள் ஓடிவிட்டாங்க..... இருட்டின பகுதியாக இருந்ததாலே சம்பந்தப்பட்ட பையன்களைத் தெளிவாக அடையாளம் கூற முடியாத நிலையிலே இருக்கிறாங்க மாணவிகள். இருந்தாலும்......'' என்று கூறி நிறுத்தினார் இன்ஸ்பெக்டர்.

இதயத்துக்குள் யாரோ கையைவிட்டு நெருடுவதைப் போல் உணர்ந்தார் ராமபத்திரன். ராஜா இதில் சம்பந்தப்பட்டிருப்பானோ? அவன் நவீன டீன் ஏஜ் நாகரீகங்களை அப்படியே பின்பற்றி நடக்கும் விதம் அவருக்குத் தெரியும். யானைக் கால் பேண்டும், கருநாக சைட்போர்னுமாக அலங்கோலமாக அலைவது தெரியும்.... இதெல்லாம் இந்த டீன்ஏஜின் வேகம்; காலம் அதைத் தானே தணிய வைத்துவிடும் என்று எண்ணினார். ஏன்? அவர் பெண் கமலினி கூட அப்படித்தான் அலைகிறாள். அவர் மனைவி தினம் தம் மகளுடன் சண்டை போடுவதையும் அவர் தெரிந்து கொண்டுதான் இருந்தார். ஆனால் இவற்றையெல்லாம் கண்டு கொள்ளாதவர்போலவே அவர் இருப்பார். இந்த இளைஞர் சமுதாயத்தோடு எதிர்நின்று தோற்றுப் போவதைவிட அதனுடன் ஒத்துப் போய், பொறுமையாக நல்ல எதிர்காலத்துக்குக் காத்து நிற்பதுதான் அறிவுடைமையாகிறது அவர் அனுமானம். ஆனால் ஞானவுக்கோ இந்த மாற்றங்கள் கலக்கத்தையே கொடுத்திருந்தன.... ஒவ்வொரு நாளும் தன் மகள் கல்லூரியிலிருந்தோ வெளியிலிருந்தோ திரும்பி வரும் வரையில் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டுதான் இருப்பாள். பண்பாட்டுக்கு வரும் ஆபத்தை உயிருக்கே வரும் ஆபத்தாக நினைக்கிறவள் அவள்.

சற்று நிலைமையைச் சுதாரித்த ராமபத்திரன் பேசினார்: '''வைராக்கியமுள்ள சில இளைஞர்களை என்னிடம் கொடுங்கள்....இந்த உலகத்தையே மாற்றிக் காட்டுகிறேன்'னு விவேகானந்தர் சொன்னதைப் படிச்ச ஞாபகம் எனக்கு இருக்கு. ஆனால் இந்த இளைஞர்கள் இன்னைக்கு உருவாகிற விதம் ரொம்ப வேதனையாக இருக்கு... உங்க விசாரணைக்கு என் பையனைக் கூப்பிட வேணுமா இன்ஸ்பெக்டர்?''

''உங்கள் மன வருத்தம் புரிகிறது. உங்கள் மாதிரி சமுதாய நாகரிகத்தை மதிக்கிறவங்க இன்னைக்குச் சொந்த மகனையும், மகளையும் கூடக் கட்டுப்படுத்த முடியாமல் இருக்கிறதை நினைக்கிறப்போ ரொம்ப வருத்தமாயிருக்கு. சரி, இருக்கட்டும். உங்க பையனை விசாரிக்கிறதுக்கு முன்னாலே உங்ககிட்டே சில கேள்விகள் கேட்கப் பிரியப்படறேன்'' என்று கூறிவிட்டுத் தொடர்ந்தார்.

''இன்னைக்கு உங்க பையன் இரவு எட்டு மணிவாக்கில் எங்கே இருந்தார்ன்னு சொல்ல முடியுமா?''

ஞானவையைப் பார்த்தவாறு ராமபத்திரன், ''எனக்கு அவன் எங்கே போறான்னு தெரியாது..... நான் ஆபீஸிலேயிருந்து வரும் போது அவனும் இல்லே.... அவளும் இல்லே'' என்றார்.

''உங்களுக்குத் தெரியுமா அம்மா?'' என்று ஞானவையைக் கேட்டார் இன்ஸ்பெக்டர்.





சற்றுத் தயங்கிய அவள் பேசினாள் : ''இன்னைக்குக் கல்லூரியிலேயிருந்து வந்ததும், அண்ணனும் தங்கையுமா, ரெண்டு பேரும் வெளியிலே ஒண்ணாப் போனாங்க.... எங்கே போறீங்கன்னு கேட்டதுக்கு அவங்க சரியாகப் பதில் சொல்லலே.....''

''திரும்பி வந்தபொழுது ரெண்டு பேரும் சேர்ந்தேதான் வந்தாங்களா ?''

இன்ஸ்பெக்டர் கேட்ட கேள்விக்கு இருவருமே பதில் அளிக்கவில்லை. ராமபத்திரன் இன்ஸ்பெக்டரின் ஒவ்வொரு கேள்வியும் குத்தீட்டிபோல் இருப்பதை உணர்ந்தார்.

மீண்டும் ஜானகியே தொடர்ந்தாள். ''அவள்தான் முதல்லே வந்தாள்....அப்புறம் அரை மணி நேரம் கழிச்சு அவன் வந்தான்!''

''வரும் போது நேரம் ?''

''சரியாகத் தெரியலே.....!''

''பரவாயில்லை...., உத்தேசமாச் சொல்லுங்க...... !''

'' ஒன்பது மணி இருக்கும்.''

''வந்ததும் என்ன செய்தார் ?''

''சாப்பிடக்கூட இல்லை..... 'கமலினி வந்தாளா'ன்னு மட்டும் கேட்டுட்டு அவன் மாடிக்குப் போய்விட்டான்!''

''வேறே நீங்க ஒண்ணும் கேட்கலையா ?''

'' கையிலே ஏதோ அடிபட்டு, கட்டு போட்டுக்கிட்டு இருந்தான். 'ஏன்'னு கேட்டேன். பதில் சொல்லலை.''

''சரி! உங்க பையனைக் கொஞ்சம் கூப்பிடுறீங்களா ?''

''அதுக்கு முன்னாலே எனக்கொரு சந்தேகம், இன்ஸ்பெக்டர்!'' என்றார் ராமபத்திரன்.

''ஓ, பேஷாக !''

''நீங்கள் என் பையனைச் சந்தேகிப்பதற்கு காரணம்.....? சம்பந்தப்பட்டவங்க தெளிவாகத் தெரியல்லேன்னு சொன்னீங்களே...!''

'' தெளிவாகத் தெரியல்லேன்னுதான் சொன்னேன். உத்தேசமா தெரியவந்தது சில பேர்.... அந்த மாணவிகளை விசாரிச்சப்ப அவர்களே யூகித்துச் சொல்ல சில பேரை விசாரிக்க வேண்டிய கட்டாயத்துக்கு ஆளாகியிருக்கிறேன். சம்பவம் நடந்த நேரத்தில் அந்தச் 'சிலபேர்' எங்கே, எங்கே இருந்தாங்கன்னு தெரிந்து கொள்ள ஆசைப்படறேன்....!''

ஜானகியைத் திரும்பிப் பார்த்தார் ராமபத்திரன். ''நான் போய் அழைத்துக் கொண்டு வரேன்'' என்று கிளம்பிய ஜானகியைத் தடுத்தார் இன்ஸ்பெக்டர்.

''இங்கிருந்தே கூப்பிடுங்க!'' ராமபத்திரனுக்கு இன்ஸ்பெக்டரின் முன்னெச்சரிக்கை வியப்பைத் தந்தது. ராமபத்திரனே மகனுக்குக் குரல் கொடுத்தார்...... இரண்டாவது அழைப்புக்கு அவனும், கமலினியும் அவரவர் அறையைவிட்டு வெளியே வந்தனர். ராஜாவுக்கும் கமலினிக்கும் இன்ஸ்பெக்டரைக் கண்டதும் மயக்கமே வருவதுபோல் இருந்தது. அப்பா அண்ணனை அழைப்பதற்கான காரணம் அறிய வெளியே வந்த அவளுக்கு அதிக அதிர்ச்சியாக இருந்தது. ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். இன்ஸ்பெக்டர் அவனை நோக்கிக் கூவினார். ''மியர் அப் ராஜா! கொஞ்சம் கீழே வர்றீங்களா? சீரியஸா ஒண்ணும் இல்லே. சிறிய விளக்கம் தேவை!''

கீழே இறங்கி வந்த ராஜாவைத் தொடர்ந்தாள் கமலினியும். அவள் முகம் பேயறைந்ததைப் போல் வெளுத்திருந்தது. இமைகொட்டாமல் நீண்ட நாட்களுக்குப் பின் பார்ப்பதைப் போல அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள் ஜானகி. எதுவும் பேசாமல் வந்து நின்றான் ராஜா. அவன் முகத்தையே பார்க்கப் பிடிக்காதவர் போல் தம் முகத்தைத் திருப்பிக் கொண்டார் ராமபத்திரன்.

''ஏண்டா ராஜா! இன்னிக்குச் சாயந்திரம்......!''

''உஸ்.....'' என்று ஜானகியை அடக்கினார் இன்ஸ்பெக்டர்.

''மிஸ்டர் ராஜா ! சில கேள்விகள் கேட்கிறேன். அதற்கு நேரிடையாக உண்மையான பதில் தேவை !'' என்றார் இன்ஸ்பெக்டர்.

மௌனமாக இருந்தான் ராஜா.

''இன்றைக்கு இரவு எட்டு மணி போல் நீங்கள் எங்கே இருந்தீங்கன்னு சொல்ல முடியுமா ?''

கமலினியின் முகத்தைப் பார்த்த ராஜா சிறு தயக்கத்துக்குப் பின் சொன்னான்: '' சினிமாத் தியேட்டரிலே !''

'' உங்கள் சகோதரி கமலினிகூட இருந்தாங்களா?''

''இல்லே.... நாங்க ரெண்டு பேரும் வெளியிலே கிளம்பிய உடனேயே அவள், அவள் சிநேகிதி வீட்டுக்குப் போயிட்டாள்.'' அவசரமாகப் பதில் சொன்னான் ராஜா.

''அப்ப தனியாகத்தான் நீங்க சினிமாப் பார்த்தீங்களா ?''

ராஜா தயங்கினான்.... சிறிது நேர யோசனைக்குப்பின், ''என் நண்பன் கூடப்போயிருந்தேன் !'' என்றான்.

''நண்பன் பேரு ?''

சற்று நேரம் விழித்தபின், ''கோபால் !'' என்றான்.

''எந்தத் தியேட்டர் ?''

''சபையர் !''

''அந்தத் தியேட்டர் டிக்கெட் ஏதாவது நீங்க வைச்சிருக்கீங்களா?''

திரும்பவும் விழித்தான் ராஜா. இன்ஸ்பெக்டரே கேட்டார் : ''ஒரு வேளை அதை விட்டுட்டீங்களா ?''

தலையை ஆட்டினான். வியர்த்தது அவனுக்கு.

''திரும்ப வீட்டுக்கு எதிலே வந்தீங்க ?''

''டாக்ஸியிலே.''

''அதென்ன கையிலே கட்டு... காயமா?''

''ஆமாம்..... பஸ்ஸில் வரும்போது ஒரே கூட்டம். இடிச்சுக்கிட்டேன்.....!''

''டாக்ஸியிலே வந்ததா முதல்லே சொன்னீங்க. இப்ப பஸ்ஸிலே இடிச்சுக்கிட்டேங்கிறீங்களே!'' பெரிய குற்றத்தையே கண்டுபிடித்துவிட்ட பெருமிதம் இலேசாக முகத்தில் படர இன்ஸ்பெக்டர் கேட்டார்.

''பஸ் டிக்கெட் கேட்பேன்னு டாக்ஸின்னீங்களா?'' என்று வாய்விட்டுச் சிரித்தார் இன்ஸ்பெக்டர்.

ராமபத்திரனுக்கு உடம்பை ஏதோ செய்தது. இன்ஸ்பெக்டர் தொடர்ந்தார்:

''சரி.... நீங்க சொன்னீங்களே, கோபால், அவர் வீட்டுக்கு ஃபோன் உண்டா ?''

அவனுக்கு இளமையிலேயே கற்பியுங்கள்

# தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.



ஈறுகளை உறுதியுடனும் ஆரோக்கியத்துடனும் வைத்திருக்க அவற்றைத் தினமும் தவறாமல் தேய்த்துக் கொடுப்பது சிறந்த வழி என்று பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள். அது போலவே, பற்சிதைவைத் தடுக்கும் சிறந்த வழி, இரவிலும் காலையிலும், ஒவ்வொரு முறை உணவருந்திய பின்னும், தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, பற்சிதைவைத் தோற்றுவிக்கும் உணவுத் துகள்களை அகற்றுவது. போர்ஹென்ஸ் பற்பசையால் தவறாது பல் துலக்க உங்கள் குழந்தைக்குக் கற்பியுங்கள். ஏனெனில் போர்ஹென்ஸ், பல் வைத்தியர் ஒருவரால் விசேஷமாக உருவாக்கப்பட்ட பற்பசை. அதோடு போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் ஜூனியர் டூத் பிரஷ் கொண்டு ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்கவும் கற்பியுங்கள்.




**போர்ஹென்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது**

**போர்ஹென்ஸ்**

பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

**இலவசம்!**

K.6

பெயர் ____________ வயது ____________

விலாசம் ____________

113 F-172 R-TM

இந்தக் கேள்வியைச் சற்றும் எதிர்பாராதவன் போல் அதிர்ந்து போனான் ராஜா. தயங்கித் தலையை ஆட்டினான்.

"டயல் பண்ணி அவரைக் கூப்பிடுங்க !" என்றார் இன்ஸ்பெக்டர்.

ஒரு கணம் தயங்கியவன் டெலிஃபோனை நோக்கி நகர்ந்தான். டயல் பண்ணிக் கொண்டிருந்த ராஜாவை நெருங்கிய இன்ஸ்பெக்டர் அவன் டயல் பண்ணி முடித்ததும் ஃபோனை அவனிடமிருந்து தம் கையில் பிடுங்கிக் கொண்டு விட்டார்.

"ஹலோ... மிஸ்டர் கோபால் வீடா....? ஓ! அவரே தான் பேசறதா....? இன்ஸ்பெக்டர் பேசறேன். மிஸ்டர் ராஜா வீட்டிலிருந்து.... ஆமாம்.... உங்கள் நண்பன் தான். அவங்க அப்பா அவரை இன்னும் காணோம்கிறார். ஒரு வேளை உங்க வீட்டுக்கு... ஓஹோ..... ஏன்.... இன்றைக்கு?... ஓஹோ! நன்றி.....!"

ஃபோனை வைத்த இன்ஸ்பெக்டர் ஒரு புன்னகையுடன் எல்லோரையும் பார்த்துவிட்டுச் சொன்னார்: "மிஸ்டர் ராஜா...! இன்னிக்கு அவர் கல்லூரிக்கே வரலையாம்.... உங்களைப் பார்த்தே அவர் இரண்டு நாட்களாகுதாம்!"

இதுவரையில் பேசாமல் நின்றிருந்த ராமபத்திரன், "யூ ராஸ்கல்!" என்றவாறு ராஜாவின் மீது பாய்ந்தார். குறுக்கே புகுந்து தக்க சமயத்தில் இன்ஸ்பெக்டர் தடுத்தார். "கொஞ்சம் அமைதியாயிருங்கள், மிஸ்டர் ராமபத்திரன்."

கமலினியின் கண்களில் நீர் வழிந்தது. ஏதோ சொல்ல வாயெடுத்தவள் ராஜாவின் முகத்தைப் பார்த்து நிறுத்திக் கொண்டாள்.

"மிஸ்டர் ராஜா...! மறைக்காமல் சொல்லுங்கள்..... இன்றைக்கு இரவு எட்டு மணி போல, சில நண்பர்களோடு நாலைந்து மாணவிகள் வந்த டாக்ஸியை உங்க கல்லூரி காம்பவுண்டுகிட்டே வழி மறிச்சு, டிரைவரைத் தாக்கியிருக்கீங்க.... இல்லையா? பெண்களைத் தவறான முறைக்குப் பலவந்தப்படுத்தினீங்க இல்லையா ?"

ஜானகிக்கு நெஞ்சம் படக் படக்கென்று அடித்துக் கொண்டது. வியப்போடு இன்ஸ்பெக்டரைப் பார்த்த ராஜா சட்டென்று ஏதோ முடிவுக்கு வந்தவனைப் போல், "ஆமாம், இன்ஸ்பெக்டர்...." என்றான். மின்னல் உடலுக்குள் பாய்ந்ததைப் போல் இருந்தது ஜானகிக்கு. "என்னடா சொன்னே?" என்றவள் அவன் மீது பாய்ந்து அவனை மாறி மாறி அறையலானாள்.

கமலினி ஓடி வந்து ஜானகியைத் தடுத்தாள். "அம்மா, நிறுத்து! அண்ணன்...." என்று பேச ஆரம்பித்தாள். ஆனால் "கமலினி பேசாமல் இரு...." என்று கத்தினான் ராஜா.

"ஏன்டா, அவளைப் பேசாமல் இருக்கச் சொல்லறே?... கற்புங்கிறது யாருக்குடா. நீ ஒரு சகோதரியோட பிறக்கலே....தூ.... என் முகத்திலேயே விழிக்காதேடா..." என்று கத்தியவண்ணம் தன் தலையில் அறைந்து கொள்ளத் தொடங்கியவளை ராமபத்திரனே ஓடி வந்து தாங்கினார்.

"ஜானகி.... என்ன இது....? பேசாமல் இரு...!" என்று அடக்கினார் ராமபத்திரன்.

## பாகவதப் பெருவிழா திருமுறைத் திருவிழா

வருகிற அக்டோபர் ஐந்தாம் தேதியிலிருந்து பதின்மூன்றாம் தேதி முடியச் சென்னைமாநகரில் பக்தி நெறிக்கும், சமய சமரஸ உணர்வுக்கும் ஒரு மகோற்சவம் நடக்கவிருக்கிறது. நூற்றெட்டுப் பண்டிதர்கள் முதல் ஏழு நாட்களிலும் தனித்தனியே பாகவதம் பதினெட்டாயிரம் சுலோகங்களையும் பாராயணம் செய்வார்கள். அதேபோல் தமிழிசைப் புலவர்கள் சைவத் திருமுறை பன்னிரண்டையும், வைஷ்ணவத் திருமுறை திவ்யப் பிரபந்தம் நாலாயிரத்தையும், செல்லவச் சூடிவாரால் அருளப்பட்ட தமிழ் பாகவதம் ஐயாயிரம் பாடல்களையும் பாராயணம் செய்வார்கள். பாரதத்தின் பல பகுதிகளையும் சேர்ந்த அருளாளர்களான ஞானிகள், சன்யாசிகள், பக்தர்கள், பண்டிதர்கள் மூலம் உபன்யாசங்கள், ஹரிகதை, பஜனை, சங்கீர்த்தனங்கள் நடைபெறும்.

சென்னை லாயிட்ஸ்ரோடு, ஹேமமாலினி கல்யாண மண்டபத்தில் விழா நடைபெறும். தினமும் காலை மாலை நேரங்களில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கும் சிவபெருமானுக்கும் லட்சார்ச்சனை உண்டு.

கடைசி நாள் 13-10-73 அன்று வேத சைவ வைஷ்ணவ ஆகம முறைப்படி மகா மிருத்யுஞ்ஜய ஹோமமும் ஸ்ரீ மகா சுதர்சன ஹோமமும், கீதா ஹோமமும் நான்கு வேத பாராயணங்களும் நடைபெறும். ஸ்ரீ வைத்திய சுப்பிரமணிய அய்யரின் தலைமையில் ஸ்வாமி ஹரிதாஸ், சுப்பிரம்மம் முதலிய பாகவத சிரேஷ்டர்கள் கூடி, விழாவை ஏற்பாடு செய்துள்ளார்கள். இகபர சுகங்களை அளிக்கவல்ல இவ்விழா பற்றிய விவரங்களை, "காரியதரிசி, பாகவத - திருமுறை விழாக் குழு, 13, டிரஸ்ட் பாக்கம், சென்னை-28" என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

இன்ஸ்பெக்டர் பேசினார் : "ரொம்ப வருத்தமா இருக்கு.... இன்றைய இளைஞர் போக்கு.... நம்ப சகோதரியின் கற்பு பாதுகாக்கப்படணும்னு நாம் விரும்புவதில்லையா? நாகரீகம்கிற பேரில் ஒரு ஜெனரேஷனே வீணாகப் போயிடும் போலே இருக்கு....!"

"இன்ஸ்பெக்டர்..... நீங்கள் அவனை அழைத்துச் செல்லலாம். எனக்கு இதுவரையில் ஒரு மகன் இருந்ததாகவே நினைக்கப் போகிறதில்லை."

கமலினி கதறினாள். "அப்பா ! என்னப்பா சொல்றீங்க.... உண்மையாலே...."

ராஜா கத்தினான்: "கமலினி.... நீ பேசாமல் இரு... நான் செஞ்சதுக்கு இது சரியான தண்டனைதான்.... இன்ஸ்பெக்டர், வாங்க போகலாம் !"

இன்ஸ்பெக்டர் இலேசாக ஒரு புன்னகை பூத்தார். "பொறுங்க ராஜா...! சட்டம் அவ்வளவு சுலபமா ஓர் ஆளைக் குற்றவாளின்னு ஏற்றுக் கொள்ளாது...." என்றவர் சற்று யோசித்துத் திரும்பிக் கமலினியை நோக்கி, "ஏம்மா.... அதே நேரத்திலே நீ எங்கே இருந்தேன்னு சொல்ல முடியுமா?" என்றார்.

ராஜா கத்தினான். "இன்ஸ்பெக்டர்! இது அநாவசியமான கேள்வி..... நீங்க விசாரிக்க வந்தது என்னைத்தான் !"

"இருக்கலாம்.... இருந்தாலும் சம்பந்தப்பட்ட விஷயங்கள் தெளிவாகவேணும், இவ்



## பூமிக்குள் ஊடுருவி நோக்கும் புதுமைக் கருவி

சோவியத் நாட்டு இஞ்சினியர்கள் பூமிக்கு அடியில் ஏழு மீட்டர் ஆழத்தில் போடப்பட்டுள்ள போக்குவரத்துக் கம்பித் தொடர்புகள், குழாய்த் தொடர்புகள் முதலியவற்றைப் பூமியின் மேற்பரப்பிலிருந்து ஊடுருவிப் பார்த்து அவற்றைத் தெளிவாகப் புலப்படுத்தக்கூடிய கருவியொன்றை உருவாக்கியுள்ளனர். கட்டிடங்கள் கட்டத் திட்டமிட்டுள்ள பிரதேசத்தின்மீது இந்தக் கருவியைக் கொண்டு சென்றால், அந்தப் பிரதேசத்தில் பூமிக்கடியில் பல்வேறு ஆழங்களில் மின்சாரக் கம்பிகள், செய்திப் போக்குவரத்துத் தொடர்புகள், சாக்கடைக் குழாய்கள், குடிதண்ணீர்க் குழாய்கள் முதலியவை எங்கெங்கே உள்ளன என்பதை யெல்லாம் ஒருவர் திட்ட வட்டமாகக் கண்டறிந்து அதனைக் குறித்துக் கொள்ள முடியும். எனவே கட்டிட வேலைகளை மேற்கொள்ளும் காலத்தில் பூமிக்கடியில் உள்ள இத்தகைய தொடர்புகளுக்குச் சேதம் எதுவும் விளைவித்துவிடுவோமோ என்ற பயம் எதுமின்றி, கட்டிட நிபுணர்கள் புதிய கட்டிடங்களுக்கான திட்டங்களை அதற்கேற்பத் தீட்டிக் கொள்ள முடியும். - சோவியத் விஞ்ஞானச் செய்தி

வளவு வருஷ சர்வீஸுக்குப் பின்னால் நான் தவறு செய்வதை என் இலாகா விரும்பாது. அதில் எனக்கும் விருப்பமில்லே....'' என்றவர் கமலினியை நோக்கி, ''ம்... சொல்லும்மா. யாருக்காகவும் பயப்பட வேண்டாம். உன்னைக் காப்பாற்ற இன்னொருத்தர் பழி ஏற்பதைப் பார்த்துக்கிட்டு நீ சும்மா இருக்கலாமா?'' என்றார்.

''வேண்டாம்.... கமலினி. சொல்லாதே'' என்று கத்தினான் ராஜா.

தயங்கியபடி பார்த்தாள் கமலினி. ஜானகி கத்தினாள். ''என்னடி சொல்லு.... அவனுக்காகப் பார்க்காதே.... இந்தத் தாய் மேலே ஆணையாய் உண்மையைச் சொல்லுடி...... இந்தப் பாழும் வயிற்றிலே உன்னைப் பத்து மாதம் சுமந்தது உண்மைன்னா, நீ உண்மையைச் சொல்லுடி......!''

''அம்மா....! என்னை மன்னிச்சிடும்மா!'' காலில் கதறி விழுந்தாள் கமலினி. விம்மல்களுக்கிடையே அவள் பேசலானாள்: ''நான் அண்ணனோடேதாம்மா இருந்தேன்!''

''என்ன குழப்பம்.... என்ன திருப்பம்?'' என்ற இன்ஸ்பெக்டர், ''ம்... சொல்லும்மா. தொடர்ந்து சொல்லுங்கோ!'' என்றார்.

''நானும் அண்ணனும், அண்ணன் நண்பன் பாஸ்கரின் வீட்டிலே விருந்துன்னு போயிருந்தோம். அம்மாகிட்டே சொன்னால் போக வேண்டாம்னு தடுப்பாங்கன்னுதான் சொல்லலே..... ஆனால் பாஸ்கர் வீட்டிலே யாரும் இல்லே.... பாஸ்கரும்... இன்னொரு நண்பரும்தான் இருந்தாங்க.....'' கமலினி அழ ஆரம்பித்தாள்.

''ம்.... சொல்லும்மா!'' - இன்ஸ்பெக்டர் ஊக்கப்படுத்தினார்.

'' அண்ணன் 'விருந்துன்னு சொன்னியே'ன்னு கேட்டான்.... 'அவன் உங்களுக்குத்தான் விருந்து'ன்னான்.... மாடிக்குப் போனோம்.... 'டிரிங்ஸ்' என்னவோ வைச்சிருந்தான்.... அண்ணனேயும் என்னையும் குடிக்கச் சொன்னான்.... மறுத்திட்டோம்.... அவன் நண்பன் வகையாப் பேசி அண்ணனைக் கீழே கூட்டிக்கிட்டுப் போயிட்டான்.... பேசிக்கிட்டிருந்த பாஸ்கர் திடீர்னு என்னை....'' மேலே தொடராமல் அழ ஆரம்பித்தாள்.

''கமலா, சொல்லாதே! என் நெஞ்சே வெடிச்சிடும்போல் இருக்கு'' என்று கதறினான் ராஜா.

கமலா தொடர்ந்தாள்: ''அண்ணன் என் சத்தம் கேட்டு மேலே வந்திச்சு.... பாஸ்கர் வஞ்சகமா எனக்காக இந்த ஏற்பாடு பண்ணியிருக்கிறதைப் புரிஞ்சுக்கிட்டோம்... ரெண்டு பேரும் ராஜா மேலே விழுந்து அடிக்க ஆரம்பிச்சானுங்க.... அண்ணன் பக்கத்திலிருந்த பாட்டிலை எடுத்து பாஸ்கர் கையிலே அடிச்சிடுச்சு..... பயந்துபோய் அவன் நண்பன் ஓடிட்டான். நானும் அண்ணனும் வெளியிலே ஓடி வந்தோம். பாஸ்கர் பின்னாலேயே வந்தான். அதுக்குள்ளே வாசலுக்கு நாங்க வந்துட்டோம்.... இந்த விஷயம் வெளியிலே தெரிஞ்சா எனக்கு அவமானம்னு அண்ணன் யார்கிட்டேயும் சொல்லாமல் இப்படி நாடகமாடி மறைக்குது!'' கமலினி விவரத்தைச் சொல்லிவிட்டு மீண்டும் அழ ஆரம்பித்தாள்.

''இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் திரும்பி ஏன் வரலே?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''அண்ணன் தன் கையிலிருந்த காயத்துக்கு எங்க டாக்டர்கிட்டே மருந்து போட்டுக் கொண்டு வரப் போயிடுச்சு..... தெரு முனை வரைக்கும் என்னைக் கொண்டு வந்து விட்டுட்டுத்தான் போச்சு. நீங்க வேணும்னு டாக்டர் வீட்டுக்கும், பாஸ்கர் வீட்டுக்கும் ஃபோன் பண்ணிக் கேளுங்க.... அண்ணன் எதிலேயும் சம்பந்தப்படலே......''

''ஃபோன் பண்ணணுங்கிற அவசியமில்லே. யார் உண்மையைச் சொல்றாங்கன்னுகூட கண்டுபிடிக்கத் தெரியலேன்னா.... அது என் தொழிலுக்கே அவமானம்......''

''இன்ஸ்பெக்டர்! என் தங்கையைப் பற்றிய இந்த விஷயம் தயவுசெய்து வெளியிலே தெரிய வேண்டாம்..... கண் மூடித்தனமாக நடந்துக்கிட்டிருந்த எனக்குப் புத்தி வந்திடுச்சு......'' என்று கதறினான் ராஜா.

''பரவாயில்லே.... சகோதரியோட கற்பின் மேல் நம்ப இளைஞர் சமுதாயம் வைத்திருக்கிற மதிப்பு மாறவில்லேங்கிறதை நினைக்கும்போது ரொம்ப மகிழ்ச்சியாகத்தான் இருக்கு... பிறரோட அனுபவங்களை நமக்குப் பாடமா வைச்சுக்கணும்.... ஒவ்வொருவரும் சொந்த அனுபவத்திலே பாடம் கத்துக்கணும்னு என்றைக்குப் பாரதி கண்ட ஒப்பற்ற சமுதாயம் அமையறது?'' என்று ஒரு 'குட்டி'ப் பிரசங்கமே செய்து முடித்தார் இன்ஸ்பெக்டர். ''நடந்ததை மறந்துடுங்க, மிஸ்டர் ராஜா.... மிஸ் கமலினி.... ஏன்? நீங்களும்தான் மிஸ்டர் ராமபத்திரன்... உங்க மனைவிக்குத் தேறுதல் சொல்லுங்க..... இன்னைக்கு நேர்ந்த இந்தப் பிரச்னை இன்னைக்கே உங்களுக்குத் தீர்ந்து போச்சு. நீங்கள் அதிர்ஷ்டசாலிகள். ஆனால் என் வழக்குத் தீரலே.... இன்னும் பலரை விசாரிக்கணும்..... நடு நிலைமையில் நின்று பார்க்கணும்.... அதுதானே என் வாழ்க்கை? வரட்டுமா... குட்நைட்!'' என்றபடி ஜீப்பை நோக்கிச் சென்றார்.

## பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தீசஞ்சீவி

### குழந்தைகளின்
### ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

### எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை 10-00 -- 11-00 | மணி அண்டு கோ., மெயின் ரோடு. |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை 3-00 -- 6-00 | பாம்பே ஹால் வாட்சிங் ஹவுஸ், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை 9-00 -- 10-00 | Dr. மகாதேவ அய்யர் வீடு, கீழ ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை 3-00 -- 5-00 | ஷண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை 10-00 -- 11-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ், பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை 11-30 -- 12-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, சுந்தரநாடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை 5-00 -- 6-30 | யூனிபெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் ஸப்ளைஸ். |
| சேலம் | 16 | காலை 9-11 | லக்ஷ்மி ராஜ்பவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை 3 - 5 | |
| ,, செவ். பேட்டை. | 16 | மாலை 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை 10-30 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை 4-00 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை 9-00 -- 10-30 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை 4-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சீபுரம் | 19 | காலை 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்ட்ஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு, திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை 3-00 -- 5-00 | P. L. R. அண்டு கோ., தெப்பக்குளம், மைலாப்பூர். |
| செங்கற்பட்டு | 21 | காலை 10-00 -- 11-00 | அப்ரீல் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சிப் கோர்ட் எதிர்புறம்) |
| விழுப்புரம் | 21 | மாலை 5-00 -- 6-00 | மீனாட்சி நிபாக்கோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை 8-30 -- 10-00 | பாரத் வாட்ச், கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ண மெடிகல் ஹால், சன்னதி தெரு. |
| கடலூர் N. T. | 22 | மாலை 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேபியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை 8-00 -- 11-00 | ப்ளாக் 13, வைதிக சமாஜம், நீபசாலை. |
| சிதம்பரம் | 23 | மாலை 3-00 -- 4-00 | பாரதிய ஆயுர்வேத அமிர்த நிலையம், காமேஸ்வரன் கோயில் தெரு. |
| விருத்தாசலம் | 23 | மாலை 5-00 -- 6-00 | K. குப்புசாமி நாயுடு வீடு, கடைவீதி. |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளைஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை 11-00 -- 12-00 | வாஸவி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி. |
| பெங்களூர்-3 | 26 | காலை 9-11 | 14, V. கிராஸ் ரோடு, மல்லேஸ்வரம். |
| ,, | | மாலை 3 - 5 | |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 3 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை, B-II, 4வது கிராஸ், தில்லைநகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை, கரூர் (போன் : 87) திருச்சி ஜில்லா



# அணில் குஞ்சு

நந்தினி

ஆபீசில் தன் அறையில் நுழைந்ததும் கையெழுத்திட வேண்டிய ஃபைல்கள் நிறையச் சேர்ந்திருந்தது கண்டு எரிச்சலுற்றார் கேதாரி. குஷன் நாற்காலியில் அமர்ந்து ஒரு சுற்றுச் சுற்றியவர் மின்சார பெல்லை அழுத்தினார். தலைப்பாகையும், தோளில் இருந்து குறுக்கே விலாவுக்கு இறங்கும் டவாலியுமாக சுபேதார் உள்ளே வந்தான். அதிகாரி நாற்காலிக்குப் பின்புற சிறு பெஞ்சில் அடுக்கி இருந்த டைல்களிலிருந்து கொஞ்சத்தை எடுத்து மேசையின் மீது அடுக்கினான். மேசைக் காலில் கட்டித் தொங்க விடப்பட்டிருந்த துண்டுக் காகிதங்களில் ஒன்றைச் 'சரக்' என்று கிழித்து பால்பாயிண்ட் பேனாவைக் கிறுக்கிச் சோதித்தபின் மடமடவென்று ஃபைல்களில் கையெழுத்திட்டார் கேதாரி. 'டொக் டொக்' என்று பேடுகள் ட்ரேயில் விழுந்தன. எல்லா பேடுகளிலும் கையெழுத்துப் போட்டுப் பேனாவை பென்ஹோல்டரில் செருக அவருக்கு அரை மணி நேரம் ஆயிற்று.

அந்த நேரம் சூப்பிரண்டு ஒருவர் உள்ளே வந்து 'விஷ்' பண்ணினார். ''ஜெனரல் பில்டிங் அட்வான்ஸ் ஃபைல் உங்ககிட்ட இருக்கு சார். அது வேணும்.''

''இல்லியே, குடுத்திட்டேன் போல இருக்கே?'' என்றபடி அவர் மேசை டிராயர் பூட்டைத் திறந்தார். இழுத்தார். ''என்னய்யா ஒரே குப்பையும், சத்தையும்? இந்தப் பியூன்கள் என்ன செய்யறாங்கள்?'' என்று கேட்டுவிட்டு. ''டீர்? இவ்வளவு குப்பையா? எப்படிச் சேர்ந்தது? ஒரே சணலும் நாரும்?'' என்று பென்சில் அவியாய் குப்பையைக் கிளறினார் கேதாரி.

''நீங்க சிரமப்படாதீங்க சார். பியூனை ஒழிக்கச் சொல்வோம்'' என்று அதிகாரியின் சார்பில் தாமே பெல்லை அழுத்தினார் சூப்பிரண்டு. வந்து நின்ற பியூனிடம், ''ஏனய்யா, ஐயா மேசையை எல்லாம் சுத்தம் பண்ணறது இல்லே?'' என்று சத்தம் போட்டார். ''நான் அப்புறம் வரேன் சார்'' என்று போய்ச் சேர்ந்தார்.

பியூன் டிராயரைச் சுத்தம் பண்ண வந்தான். ''பாத்துய்யா, பாம்பு தேளா இருக்கப் போவுது!'' என்றபடி நாற்காலியைத் திருப்பிக் கொண்டார் கேதாரி. 'கிரீச், கிரீச்' என்று சத்தமிட்டபடி இரண்டு அணில்குஞ்சு அவர் காலருகே ஓடி வந்து திரும்பி ஓடின.

''இந்த அணில் தொல்லை தாங்க முடியலை. பாருங்க, ஆபீஸ் மேசையிலே வந்து இது பிரசவ அறை கட்டுது...'' என்றபடியே பியூன் டிராயரைச் சுத்தம் பண்ணினான்.

''அணிலா? அது எப்படிய்யா பூட்டின டிராயருக்குள்ளே போகுது?''

''போகுங்க. கீழே ஓட்டை இருக்குது.''

''போன், போன், அப்ப கலைக்காதய்யா. பேசாமல் இரு. இருந்துட்டுப் போகட்டும். அந்த டிராயரையே ஒழிச்சு விட்டுடுவோம். அணில் நிம்மதியா குட்டி போடட்டும்'' என்றார் கேதாரி. குண்டூசிகள், பேக், சில முக்கியமான காகிதங்கள், இங்க் புட்டி, ஒரு ரப்பர் ஸ்டாம்ப், பென்சில் எல்லாவற்றையும் எடுத்து வேறு டிராயரில் வைத்துக் கொண்டார்.

அப்போது அலமேலு — ஒரு குமாஸ்தா — அவருடைய அறையில் நுழைந்து பயபக்தியாக நின்றான். அவனுடைய இதயத்தின் நடுக்கம் கைகளில் தெரிந்தது.

''என்ன?''

''வைக்கு லீவு..... இன்னும் சாங்ஷன் ஆகல்லே.''

''எங்கிட்ட இன்னும் பேப்பர் வரலியே?''

''எஸ்டாப்ளிஷ்மெண்ட் கிளார்க் உங்ககிட்டே அனுப்பிட்டேன்னு சொன்னாரே!''

''அப்ப நான் போய் சொல்றேனா?''

''இல்லே, வீட்டிலே ரொம்பக் கஷ்டம். அந்த லீவு சம்பளம் வந்தா....''

''எல்லே என்ன பண்ணச் சொல்றே? ஒவ்வொருத்தர் வீட்டிலேயும் ஆயிரம் கஷ்டங்கள் இருக்கும். ....இங்கே கிடையாது. என் மேசை சுத்தமா இருக்கு. ஒரு ஃபைலையும் நான் நிறுத்தி வைக்கிறது இல்லே. வேணும்னு சந்தேகமா இருந்தா இந்த அறை முழுதும் பாரு. ஃபைல் கிடைச்சா எங்கிட்ட கொண்டு வந்து கொடு. உடனே கையெழுத்துப் போடறேன்.''

''பத்து நாள் சம்பளத்தைப் பிடிச்சுட்டாங்களே, சார்? இந்த பெட்ரோலிலே நான் யார்கிட்டே போய்க் கடன் கேட்பேன்? கொஞ்சம் சீக்கிரமா லீவை சாங்ஷன் பண்ணிவிடுங்களேன்......''

''திரும்பத் திரும்ப அதைத்தானே சொல்றே? என்னைப் பொறுத்தவரைக்கும் தாமதம் கிடையாது.''



''நீங்க கொஞ்சம் எஸ்டாபிளிஷ்மெண்ட் கிளார்க்கிட்டே சொல்லக் கூடாதா?''

''எனக்கே உத்தரவு போட்றியா? என்ன செய்யணும், எதைச் செய்யணும், எப்படிச் செய்யணும்னு தெரியாம நான் விழிச்சுக்கிட்டிருக்கேன், நீ ஆலோசனை சொல்ல வந்துட்டே. அப்படித்தானே?''

அலமேலு தலை குனிந்து திரும்பினாள்.

''இடியட்'' என்று முணங்கியபடி சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டார் கேதாரி. அலமேலுவின் லீவு பேப்பர் டிராயரில் பத்திரமாக இருக்கிறதா என்று இழுத்துப் பார்த்துக் கொண்டார்.

அவர் அந்த அலுவலகத்துக்கு வந்த புதிதில் அலமேலுவின் சுறுசுறுப்பும், வேலைத் திறனும் அவரைப் பெரிதும் கவர்ந்தன. அவளுடைய ஒவ்வொரு ஃபைலிலும், 'குட், வெரி குட்' என்று எழுதி அனுப்பினார். அவளுடைய கையெழுத்தில் எது வந்தாலும் கண்ணை மூடிக் கொண்டு கையெழுத்திடலாம் என்று அவளைப் பற்றி அபிப்பிராயம் கொண்டார். அவளுடைய லீவு பேப்பரோ, அட்வான்ஸ் அப்ளிகேஷனோ எது வந்தாலும் தயங்காமல் உடனுக்குடன் கையெழுத்திட்டு அனுப்பினார்.

அவளைப் பற்றி அவர் மனத்தில் கொண்டிருந்த நல்ல அபிப்பிராயம் ஒரு நாள் மாலையில் தகர்ந்து போயிற்று. பரம்பரைப் பணக்காரரான கேதாரி என்னதான் டீசன்ட் ஹோட்டலாக இருந்தாலும் அங்கே எல்லாம் நுழையமாட்டார். உள்ளே நுழைந்ததும் பின்னால் தாமே மூடிக் கொள்ளும் கதவுகள் கொண்ட டீலக்ஸ் மணம் பரப்பும், ஏ. ஸி. ஹோட்டலின் கம்பள விரிப்பில் மட்டுமே நடந்து பழக்கப்பட்டவை அவருடைய கால்கள். அன்று என்னவோ தலைவலி பொறுக்க முடியாமல் அவர் ஒரு ஹோட்டலில் நுழைந்தார்.

அப்போதுதான் இந்த அலமேலு ஒருவனின் தோளில் தொங்கிக் கொண்டு அவனுடைய எல்லாப் பேச்சுக்களுக்கும், 'கிக்கிகி' என்று இளித்தபடியே கேதாரியின் பக்கமே பார்க்காமல் ஹோட்டலை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தாள். பார்த்ததுமே இவருக்கு அதிர்ச்சியாக இருந்தது. 'நம்ம அலமேலுவா இப்படி!'

அடுத்த நாள் ஆபீசுக்கு வந்ததும் ஸ்டெனோவை அழைத்து அவனைப் பற்றி விசாரித்தார். பக்கத்து ஆபீஸ் குமாஸ்தாவை அலமேலு 'இது பண்ணுவது' தெரிய வந்தது. அப்போதே அலமேலு அவர் மதிப்பில் தாழ்ந்து போனாள். அந்த நிமிடமே அவளுடைய ஒரு ஃபைலில் கன்னாபின்னாவென்று எழுதித் திருப்பி அனுப்பினார்.

அலமேலு என்று இல்லை, யார் காதலித்தாலும் அவருக்குப் பிடிக்காது. சினிமாவில் கூடக் காதல் காட்சிகள் வரும்போது எழுந்து வெளியில் போய்விடுவார். அப்படி போய்த்தான் அவருக்குச் சிகரெட் பிடிக்கும் பழக்கம் ஏற்பட்டது. காதலையும், காதலிப்பவர்களையும் அவர் வெறுப்பதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. அவருடைய தமக்கை இப்படித்தான் ஒரு குறைந்த சம்பளக்காரனைக்

காதல் பண்ணிப் பெரிய அக்கப்போராகி, செல்வத்தையும், உறவினர்களையும் உதறி, இப்போது ஒண்டுக் குடித்தனக் கூட்டுக் குடும்பத் தலைவியாக எல்லாவிதமான கஷ்டங்களையும் படுகிறாள். அக்காவின் காதல் விவகாரம் அவர் வாழ்வில் பெரிய சோக சம்பவம். அது அவர் இதயத்தில் ஆழ்ந்த ரணத்தை ஏற்படுத்திவிட்டது. தன்னுடைய குழந்தைகளும் இப்படிக் காதல், கீதல் என்று கெட்டுப் போகக் கூடாது என்பதில் அவர் எச்சரிக்கையாக இருந்தார். மூத்தவளுக்குப் பதினேழு வயதானதுமே, தம் நண்பரும் பெரிய அட்வகேட்டுமான ஒருவர் வீட்டுக்கு மருமகளாக அனுப்பிவிட்டார். அடுத்த குட்டிக்குப் பதினைந்து நிறையப் போகிறது. வரன் தேடிக் கொண்டிருக்கிறார்.

அடுத்த நாள் கேதாரி அலுவலகம் வந்து ஒரு மணி நேரம்' ஆனதும் அலமேலு எதிரே வந்து நின்றாள். அவள் வந்து நின்றதே அவருக்குப் பிடிக்கவில்லை. வாயும், வயிறுமாக.... இவை வேலை பார்க்கவில்லை என்று யார் அழுகிறார்கள்? ஐந்து நிமிடம் அவர் தலையை நிமிர்த்தவே இல்லை. அவள் இலேசாகச் செருமினாள்.

கேதாரி ஏறிட்டு அவளைப் பார்த்தார்.

''பிரசவத்துக்கு லீவு ரெண்டு மாசத்துக்கு அப்ளை பண்ணி இருக்கேன் சார்.''

''ஆல்ரைட், பிரசவத்துக்கு லீவுதானே? சாங்க்ஷன் பண்ணிட்டாப் போச்சு.''

அவள் நன்றி சொல்லிவிட்டு அந்த அறையைவிட்டு வெளியேறினாள்.

மறு நாள்.

கேதாரி முதல் வேலையாக டிராயரைத் திறந்து பார்த்தார். அடேயப்பா, எவ்வளவு குப்பை சேர்ந்துவிட்டது! இந்த அணில் சுறுசுறுப்பாகத்தான் வேலை செய்கிறது. குப்பையைக் குவித்து அழகாக ஒரு படுக்கை மாதிரி செய்திருந்தது. அணில். நடுவில் குழிவாக அது படுத்திருந்த தடம் கூடத் தெரிந்தது. அந்தக் குழியில் தொட்டுப் பார்த்தபோது அணிலையே தொட்டுவிட்ட மாதிரி அவர் உடல் சிலிர்த்தது. இது பாட்டுக்குப் படுத்திருக்க வேண்டியதுதானே? ஏன் இந்தப் பயம் பயப்படுகிறது? பிள்ளைத் தாச்சி அணில் ஆபீஸ் நேரத்தில் தூங்குவது குற்றம் என்று அவர் கருதுவாரா என்ன? இப்படி நினைத்ததும் அந்த அணில் டிராயரில் படுத்துறங்குகிற மாதிரியும் டிராயர் இழுபடும் சத்தம் கேட்டு அரைக் கண்ணைத் திறந்து பார்க்கிற மாதிரியும், நீபாட்டுக்குத் தூங்கு என்று அவர் சொல்வது போலவும்... மனத்திரையில் தோற்றங்கள் எழுந்தன. 'கிரீச்' என்று கத்திக் கொண்டு ஓடி வந்த ஓர் அணில் ஒரு விநாடி நின்று கேதாரியை வெறித்துவிட்டு ஓடியது.

'சனியனே! நீ ஏன் என்னைப் புரிஞ்சுக்கவே மாட்டேங்கிறே? உனக்காகத்தான் உன் பிரசவ அறையை ஒழிக்க விட்டுட்டேனே? நீ பண்ணி இருக்கிற ஏற்பாட்டையெல்லாம் நான் கலைச்சுடுவேனோன்னு நீ பயப்பட வேண்டாம்.'

''என்ன சார், பிரசவ அறை எப்படி இருக்கு?'' என்று கேட்டபடியே வந்தார் ஒரு சூப்பிரண்டு. அவரைப் பார்த்ததும் டிராயரை மூடினார் கேதாரி. ''அடேடே, உங்களுக்கும் தெரிஞ்சு போச்சா? இந்த அணில் பாருங்க, எவ்வளவு புத்திசாலின்னு. நாளுக்கு நாள் எவ்வளவு கருத்தா குப்பைக் கூளங்களைச் சேர்த்து.......''

'' இந்த ரெண்டு அணில்களும் ஒண்ணை ஒண்ணு துரத்தி ஓடி, என் மேசைக்குப் பக்கத்திலே இருக்கிற கதவு மூலையிலேதான் ஒண்ணு சேர்ந்ததுங்க. இப்போ....''

''உங்க மேசை புகுந்த வீடு. என் மேசை பிறந்த வீடுன்னு சொல்லுங்கோ.''

சில நாட்கள் சென்றன.

கேதாரியின் டிராயரில் ஏராளமாகக் குப்பை சேர்ந்துவிட்டது. இந்தக் குப்பைகளின் நடுவில் அணில் குஞ்சுகள் பிறந்திருந்தால்கூடத் தெரியாது என்ற சந்தேகம் வர, பென்சிலால் குப்பைகளை ஜாக்கிரதையாக விலக்கிப் பார்த்தார்.

'' சில சமயம் இப்படிக் குப்பையைச் சேர்த்து வெச்சுட்டு ஏமாத்திடுறதும் ஏமாத்

# எழிலரசி-
# ராய்ப்பூர்
# இளவரசி
# யாரோ?

'மிஸ் ஏஷியா 1973'

'மிஸ் ஏஷியா 1973'



ராய்ப்பூர் மில்ஸ்

ஏற்றமிகு 7 மில்களில் ஒன்று



லால்பாய் குரூப்
துணிகள்

CMLB.30.162 R TM

விற்பனை ஏஜெண்டுகள்: M/S. ஏ. ஜே. எஸ். படேல் அண்ட் கம்பெனி, 5, கிடங்குத் தெரு, சென்னை-1, 76, கிழக்கு மாரட் தெரு, மதுரை. அதிகாரம் பெற்ற சில்லறை விற்பனையாளர்கள்: M/S. வெங்கடேஷ் 234, 244, என். எஸ். ஸி. போஸ் ரோடு, சென்னை-1. M/S. ஜஸ்வரீஸ், 26-பி, மேல கோபுரத் தெரு, மதுரை. M/S. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.

'அம்மா,
இன்னும்
கொஞ்சம்
கொடும்மா!'



இழைவிலும், வண்ணத்திலும், மென்மையிலும் சிறந்தது **பிரவுன் & போல்ஸன்** வெரய்டி கஸ்டர்டு பவுடர். பல்வேறு புட்டிங்குகளையும் தின்பண்டங்களையும் தயாரிக்க எப்போதும் உங்கள் வசம் அது இருக்கட்டும். அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்டிருப்பதால், வெரய்டி கஸ்டர்டு பவுடர்களிலேயே மிகவும் சிறந்தது **பிரவுன் & போல்ஸன்.**

OBM-0171 TH

## சுவைமிக்க புட்டிங் தயாரிக்க 5 எளிய நிலைகள்:




ஒவ்வொரு பெட்டியிலும் 6 இனிமையான சுவை வகைகள்.

- பிரவுன் & போல்ஸன் வெரய்ட்டி கஸ்டர்டு பவுடர் ஒரு பாக்கெட் முழுவதையும் சுமார் 4 டெஸர்ட் ஸ்பூன் (தலைதட்டிய) அளவு சர்க்கரையுடன் கலக்கவும்.
- அத்துடன் சிறிது குளிர்ந்த பால் சேர்த்து, விழுது போல் ஆக்கவும்.
- பிறகு அரை லிட்டர் பாலை சூடாக்கவும்.
- அத்துடன் கஸ்டர்டு பவுடர் கலவையைச் சேர்த்து, அது கொதிக்கும் வரை கிளறவும். ஒரு நிமிடம் கொதிக்கட்டும்.
- அடுப்பிலிருந்து இறக்கிக் குளிர விடவும்

குறிப்பு: கஸ்டர்டு கட்டியாக இருக்க வேண்டுமானால் பாலின் அளவைக் குறைக்கவும்.

இலவசம்! பிரவுன் & போல்ஸன் பக்குவ முறை நூல் செ. 5. தயவு செய்து இன்றே ஒரு பிரதிக்கு எழுதுக.

**உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்.**

# பிரவுன் & போல்ஸன்

வெரய்டி கஸ்டர்டு பவுடர்.

(முட்டை கலவாதது.)



பப்ளிசிடி டிபார்ட்மெண்ட்,
கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி
(இந்தியா) பிரை. லிட்.
ஸ்ரீனிவாஸ் ஹவுஸ், எச். ஸோமானி மார்க்,
பம்பாய்-400001.

டும் சார்! இன்னொரு வேற இடம் தயார் பண்ண ஆரம்பிச்சுடும்" என்றான் ஒரு பியூன்.

அதைக் கேட்டதும் அவருக்கு ஏமாற்றமாக இருந்தது. "போய்யா, போ. அதெல்லாம் கிடையாது. இவ்வளவு தூரம் இதையெல்லாம் சேர்த்துவெச்சுட்டு அனில்வராமப் போயிடுமா என்ன? நிச்சயம் வரும்" என்றார்.

அப்போது அலுவலகத்துக்குத் தாமதமாக வந்தவர்கள் பட்டியல் அவர் மேசைக்கு வந்தது. மணியை அழுத்தினார். வந்து நின்ற பியூனிடம், "இன்னும் அலமேலு வரலியா?" என்று கேட்டார்.

"இல்லே சார்! அவங்க கணவர் வந்திருக்கார். அவங்களுக்குத் திடீர்னு வலி கண்டு ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்காம்..." என்றபடி ஒரு சூப்பிரண்டு வந்தார்.

"என்னய்யா, நாம எதிர்பார்க்கிற பிரசவம் நடக்கமாட்டேங்கிறதே!" என்றார் கேதாரி. இருவரும் சிரித்தனர். சிரிப்பு ஓயுமுன் ப்யூன் ஒரு சீட்டைக் கொண்டு வந்தான். அலமேலுவின் கணவன் கேதாரியைப் பார்க்க வேண்டுமாம். "வரச் சொல்" என்றார் கேதாரி.

அவன் வந்தான். உட்காரச் சொன்னதும் உட்கார்ந்தான். கேதாரி அவனை வெறித்தார். உம், இவனுக்கு எல்லாம் காதல்! துடைப்பக்கட்டை! அப்பா அம்மா பார்த்து வைத்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு ஒழுங்காகக் குடித்தனம் நடத்த முடியவில்லை. தானாகக் கஷ்டங்களை வரவழைத்துக் கொண்டு, 'ஐயோ, அப்பா!' என்கிறான்கள். நன்றாக வேண்டும் பயல்களுக்கு.

"ஹலோ? வாட் கேன் ஐ டூ ஃபார் யூ?" என்று புன்னகையோடு அவனைப் பார்த்தார் கேதாரி. அந்தப் புன்னகையே அவரை ரொம்ப நல்லவராக அறிமுகப்படுத்தியது.

"அலமேலு ஜி. பி. எஃப். லோன் போட்டாள். சாங்ஷன் ஆகி ப்ரொஸீடிங்ஸ் வந்தது. பணம் வரலே."

"அப்படியா?" என்று மணியை அழுத்தினார் கேதாரி. "கேஷியரைக் கூப்பிடுப்பா." காஷியர் ஓடி வந்தான். "என்னய்யா ஆச்சு அலமேலு பில்லு? என்ன பண்றீங்க நீங்களெல்லாம்? தூங்கவா ஆபீஸ் வர்றீங்க? இன்னும் அரை மணியிலே அலமேலு பில் என் கையெழுத்துக்கு வந்தாகணும்" என்று உறுமியவர், அலமேலுவின் கணவனிடம், "நீங்க போங்க சார். நான் நாளைக்கே உங்களுக்குப் பணம் கிடைக்க ஏற்பாடு பண்ணறேன்" என்றார் சாந்தமாக.

அவன் தலை மறைந்ததும், 'உம், காதல் கல்யாணம் பண்ணிக்கிட்டே இல்லே? அந்தக் கஷ்டத்தை எல்லாம் பட்டுத்தான் தீரணும். படு!' என்று மனத்துக்குள் சொல்லியபடி டிரேயிலிருந்து அலமேலுவின் பில்லை எடுத்துக் கையெழுத்திட்டார் கேதாரி. "இந்தாங்க மிஸ்டர் காஷியர், இந்தப் பில்லை பே அண்டு அக்கவுண்ட்ஸ் ஆபீஸுக்கு அனுப்புங்க. ஒண்ணும் அவசரம் இல்லை. மெதுவா கேஷ் பண்ணினால் போதும்" என்றார்.

"அது சரி, இவன் ஏன் சார் அலமேலுவின் பில்லை எதிர்பார்க்கணும்? இவனும் லோன் போட வேண்டியதுதானே?" என்றார் சூப்பிரண்டு.

# சிரித்து வாழ வேண்டும்



"பிறர் சிரிக்க வாழ்ந்திடாதே!" என்ற பொன்மொழியைப் பொய்யாக்கவே பிறந்தவர் பென்னட் செர்ஃப். ஏராளமான நகைச்சுவைத் துணுக்கு நூல்களை வெளியிட்டுப் பிறர் சிரிப்பதற்காகவே தம் வாழ்நாளை அர்ப்பணித்தவர். அவரது ஒரு நூலிலிருந்து சில:

★ ஓர் அமெரிக்கர் செலவுகள் அதிகமாவதைத் தடுக்கத் தினச் செலவுகளை டைரியில் கணக்கெழுதி வைத்துக் கொள்ள ஆரம்பித்தார்.

முதல் நாள் அவர் எழுதிய கணக்கு:

டாக்ஸிக்கு: 2 டாலர்கள்
டிப்ஸ்: 50 செண்ட்
மற்ற செலவுகள்: 83 டாலர்கள்!

★ 'தேரர் ப்ரோக்காஸ்' என்னும் ஜெர்மானிய எழுத்தாளரின் பதிப்பாளர் அவருக்கு ஒரு தங்கக் கடிகாரத்தைப் புத்தகப் பதிப்புக்குப் பரிசாக அளித்தார்.

சில நிமிடங்களில் எழுத்தாளரிடமிருந்து டெலிபோன் வந்தது: "நீங்கள் எனக்குப் பரிசாகக் கொடுத்த கடிகாரம் ஓடமாட்டேன் என்கிறதே?"

பதிப்பாளரின் பதில்: "நீங்கள் எழுதி நான் பதிப்பித்த புத்தகம் நகரவே மாட்டேனென்கிறதே!"

★ ஒரு விவாகரத்து வழக்கில் நீதிபதி: நீ ஏன் உன் கணவனை விவாகரத்துச் செய்ய விரும்புகிறாய்?

பெண்மணி: அவர் தம்மை எப்போதும் 'மார்க் ஆண்டனி' என்றே நினைத்துக்கொண்டிருக்கிறார்.

நீதிபதி: அதனாலென்ன நஷ்டம்?

பெண்மணி: என்னை மட்டும் 'கிளியோபாட்ரா' என்று நினைத்துக்கொள்ள மறுக்கிறார்!

★ இரண்டு வியாபாரிகள் பேசிக் கொண்டது:

"ஜனவரியில் மூவாயிரம் டாலர் நஷ்டம்; பிப்ரவரியில் நாலாயிரம் டாலர் நஷ்டம்; மார்ச்சில் ஐயாயிரம் டாலர் நஷ்டம்; இதைவிட மோசமானது ஏதாவது இருக்குமா?"

"இருக்கும்."

"எது?"

"ஏப்ரல்!"

★ நீதிபதி: நீ ஏன் எப்போதும் பாங்கிலேயே திருடுகிறாய்?

திருடன்: விலைவாசி ஏறியுள்ள இந்த நாளில் பணம் இருக்கும் இடம் அது ஒன்றுதானே?

- தொகுப்பு: கே.வி. முரளி



"டெ. சி. எல்லோ (Temporary Casual abourer) என்ன இழவோ" என்றார் கேதாரி.

இன்றைக்கும் ஏமாற்றம்தான் என்று நினைத்தபடி மெதுவாக டிராயரை இழுத்துப் பார்த்தார் கேதாரி. ஹா, என்ன அதிசயம்! இரண்டு அணில் குஞ்சுகள் கண் மூடித் தூங்கிக் கொண்டிருந்தன. அப்பா! எவ்வளவு சின்னதாக இருக்கிறது! என்ன அழகாக இருக்கிறது! தூங்கும் அழகை ஃபோட்டோ எடுத்து ஏதாவது பத்திரிகையில் போடலாம் போலிருக்கிறதே!

"இங்கே வா!" என்று ஸ்டெனோவை அழைத்தார். "பார்த்தியா அணில் குஞ்சு!"

"அடேடே!" என்று கழுத்துச் செயினைக் கடித்தபடி பார்த்தாள் ஸ்டெனோ.

"பிரசவம் ஆயிடுத்தா சார்?" என்றபடி சூப்பிரண்டு வந்தார். அவரைத் தொடர்ந்து இன்னும் சில சூப்பிரண்டுகள், குமாஸ்தாக்கள். சற்று நேரத்தில் கேதாரியின் அறை ஒரு கண்காட்சியாகிவிட்டது. தலைக்குத் தலை அணில் குஞ்சை விமர்சித்தார்கள்.

"என் சார், பிரசவம் ஆகியிருக்கு. எங்களுக்கு ஸ்வீட் கிடையாதா?"

அன்று கேதாரி மிகவும் உற்சாகமாக இருந்தார். அடிக்கடி மேசை டிராயரைத் திறந்து பார்த்தார். 'லல்லி, லல்லி' என்று சொல்லிக் கொண்டார். தொட்டுப் பார்ப்போமா என்று தோன்றியது. மெதுவாக விரல்களைக் கொண்டு போனபோது எங்கிருந்தோ 'க்ரீச்க்ரீச்' என்ற அலறல் கேட்டது. 'சனியனே, நான் உன் குஞ்சுகளை ஒன்றும் பண்ணிவிடமாட்டேன். என்னை நம்பு.'

அலமேலுவின் கணவன் வந்து எதிரே நின்றான். அவன் கையில் சாக்லெட் பொட்டலம் இருந்தது.

"டெலிவரி ஆயிடுத்து சார். சுகப் பிரசவம். ஆண் குழந்தை."

"வெரிகுட்." — கேதாரி இரண்டு சாக்லெட்டை எடுத்துக் கொண்டார்.

"சார்! இன்னும் அந்த ஜி. பி. எஃப் பணம் வரலே. படாதபாடு பட்டுக்கிட்டிருக்கோம். ஒவ்வொரு நாளையும் ஒவ்வொரு யுகமாகத் தள்ளிக்கிட்டிருக்கோம். ஏகப்பட்ட கடன்..."

" என்னய்யா ஆச்சு அலமேலு பில்லு?"

"இன்னிக்குக் காஷ் ஆயிடும் சார்."

"ஆயிடணும். மேற்கொண்டு டிலே இல்லாமல் பாருங்க."

அலமேலுவின் புருஷன் நன்றி சொல்லி விட்டுப் போனான்.

"பில் கேஷ் பண்ணி ரெண்டு நாட்கள் ஆச்சு சார். அவன் எதிரே சொல்ல வேணாம்னு சூப்பிரண்டு சொன்னார்."

"சரி, நாளைக்கு வந்தால் பணத்தைக் கொடுங்க" என்றவர், 'ஒழிஞ்சு போறு' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டார்.

அடுத்த நாள் காலையில் அவர் ஆபீசுக்கு வந்தபோது ஓர் அதிர்ச்சியான செய்தி அவருக்குக் காத்திருந்தது. ஆபீஸ் முழுதும் அவர் அந்தச் சோகச் செய்தியை எப்படி எதிர்கொள்ளப் போகிறார் என்று கவலைப்பட்டது.

அன்று காலையில் ஆபீசுக்குச் சீக்கிரம் வந்தாள் ஸ்டெனோ. கேதாரியின் டிராயரைத் திறந்து அணில் குஞ்சுகளை ரசித்தாள். லேசாய்த் தொட்டுப் பார்த்தாள். குஞ்சுகள் அதிர்ச்சியாக உடலைச் சிலிர்த்துக் கொண்டது வேடிக்கையாக இருந்தது. ஐயோ! இதுங்க உடம்பைத் தொடும்போது எப்படிக் குறுகுறுங்குது!

அப்போது போனில் 'கிர்' என்று சத்தம் வந்தது. டிராயரை அப்படியே திறந்தபடி விட்டு மெயின் டெலிபோன் இருந்த கூடத்துக்கு ஓடினாள் ஸ்டெனோ. மற்றொரு ஆபீசின் ஸ்டெனோ பேசினாள். இரண்டு பேரும் அரட்டையை முடிக்கப் பத்து நிமிடங்களுக்கு மேல் ஆயிற்று.

"யாரும்மா டிராயரைத் திறந்து போட்டது?" என்று அலறினான் காவல்காரன். ஸ்டெனோவும், இன்னும் இரண்டு மூன்று கிளார்க்குகளும், ஒரு சூப்பிரண்டும் கேதாரியின் அறைக்கு ஓடினார்கள். என்ன கொடுமை! இரண்டு அணில் குஞ்சுகளையுமே நடு அறையில் எடுத்துப் போட்டுக் காக்கை கொத்திக் குதறி இருந்தது. அணில் சுற்றிச் சுற்றி ஓடி வந்து கீச்சிட்டது.

"சரி சரி. இந்தக் கருமத்தை எடுத்துப் போடுங்கய்யா. மேசை டிராயரையும் சுத்தம் பண்ணுங்க" என்றார் கேதாரி. அதைப் பார்க்கவே அவருக்குப் பிடிக்கவில்லை. அறையில் இருந்து அகற்றும் வரையில் சன்னல் வழியே எங்கோ பார்த்துக் கொண்டிருந்தார். நிறைய காக்கைகள் பறந்தன. இதில் எந்தக் காக்கை அது?

மேசை டிராயர் குப்பைகளைப் பியூன் எடுத்துப் போட்டபோது, அழகாக விளையாடிக் கொண்டிருந்த குழந்தை ஊருக்குப் போய் விட்ட பிறகு அது விளையாடிக் கொண்டிருந்த ஒரு சொப்பு காலில் இடறினமாதிரி... யானை இறந்த பிறகு அது கட்டி இருந்த கொட்டாரத்தைப் பார்த்துப் பாகன் அதிக துயரம் அடைவானும்.... அது மாதிரி அணில் குஞ்சுகள் அழகாய் உறங்கிய அந்தத் தேங்காய் நார்ப் படுக்கை கலைபடும்போது அவருக்கு வேதனையாக இருந்தது.

அந்த நேரம் வாராத தலையும், அழுக்கு உடைகளும், எண்ணெய் வழியும் முகமுமாகப் பைத்தியக்காரன் மாதிரி அலமேலுவின் கணவன் வந்து நின்றான்.

"குழந்தை காலையில் செத்துப் போச்சு, சார்! அலமேலுவுக்கும் ஜன்னி கண்டிடுத்து. டாக்டர் அப்பப்ப எழுதிக் கொடுக்கிற மருந்துகளை வாங்கிக் கொடுக்கவும் பணம் இல்லே. ஆண்டவன் எங்களை ரொம்பச் சோதிக்கிறான் சார்......" என்று சொல்லும் போதே அவன் கண்களில் அடக்க முடியாமல் நீர் திரண்டது. கைக்குட்டையால் துடைத்தான்.

"சரி, சரி, காஷியர்கிட்டே பணம் வாங்கிக்குங்க" என்றார் கேதாரி.

அநிச்சையாக அந்த டிராயரை இழுத்தார். ஒரு சணல் துண்டு..... பாவம், அந்த அணில் குஞ்சுகள் இப்படி அநியாயமாய் இறந்திருக்க வேண்டாம். இரத்தக் காயங்களுடன் அவை இறந்துகிடந்த காட்சி கண்ணிலேயே நின்றது. அளவிட முடியாத வருத்தம் அவர் நெஞ்சை அழுத்தியது. ஆழ்ந்த பெருமூச்சோடு நிமிர்ந்தார். "எக்ஸ்க்யூஸ் மீ சார்" என்று கைகளைப் பிசைந்தபடி எதிரே நின்றாள் ஸ்டெனோ

எங்கோ ஓர் அணில் கத்தியது.

# "முருகன் வேல் துணைக்கு வரும்!"

## எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட்

எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட் பாரதநாட்டுப் பிரசிடெண்டுகளுடனெல்லாம் பழகும் வாய்ப்புப் பெற்றிருப்பவர். ஏனென்றால் பாரதப் படை வீரர்களிடையே ஒரு மேஜர் ஜெனரலாகப் பணிபுரிந்தவர். சமீபத்தில்தான் அவருக்கு உத்தியோகத்திலிருந்து ஓய்வு கிடைத்தது. தென் பிராந்தியப் படைத் தலைமைப் பொறுப்பு வகித்திருந்த மேஜர் ஜெனரல் கே. ஏ. எஸ். ராஜா அவர்கள்தான் எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட். என் கணவர்.

கோபம் வந்தாலும் சரி! ஆனந்தம் பொங்கினாலும் சரி! மனிதர் அதை அதிகமாக வெளிக்குக் காண்பித்துக் கொள்ள மாட்டார். எப்போதும் அமைதியாக இருக்க வேண்டும் என்ற விருப்பம் உண்டு. பேரக் குழந்தைகளுடன் கொஞ்சும்போது அவருடைய மகிழ்ச்சி உணர்ச்சி அவரை அறியாமலேயே கொஞ்சம் மேலோங்கி நிற்கும்.

எங்கள் திருமணம் 1948 ஆகஸ்ட் மாதம் இருபத்தி மூன்றும் தேதியன்று நடந்தது. திருமண வீட்டுச் சந்தடி அடங்கு முன்பே, இருபத்தி ஐந்தாம் தேதியன்றே படைத் தலைமைப் பீடத்திலிருந்து இவருக்கு அவசர அழைப்பு வந்துவிட்டது. ஹைதராபாத்மீது 'போலீஸ் ஆக்ஷன்' எடுப்பதற்குச் சில நாட்கள் முன்புதான்! — இவர் உடனே உத்தரவைச் சிரமேற் கொண்டு ஷோலாப்பூரில் இருந்த படைத் தலைவர் சௌதுரியிடம் ரிப்போர்ட் செய்யக் கிளம்பி விட்டார்.

நல்லவேளையாக ஹைதராபாத் விவகாரம் சில நாட்களில் முடிந்து விட்டது. ஆனால் இவர் அங்கே தொடர்ந்து சில மாதங்கள் தங்கியிருக்க வேண்டும் என்ற நிலை. ஆகவே என்னை உடனடியாக அங்கே அழைத்துப் போக ஏற்பாடு செய்தார்.



நாங்கள் விஜயவாடா ஸ்டேஷனுக்குப் போன பிறகுதான் அப்போது நிலவிய சூழ்நிலையில் ராணுவ அதிகாரிகள் தங்கள் குடும்பங்களை ஹைதராபாத்துக்கு அழைத்து வர அனுமதிக்கப்படமாட்டார்கள் என்ற செய்தி வந்தது. ஆனாலும் இவர் மனம் தளர்ந்து விடவில்லை. எப்படியோ உயர் அதிகாரிகளிடம் விளக்கி விசேஷ அனுமதி பெற்று விட்டார். சிக்கந்தராபாத்தில் எங்கள் புதுக் குடித்தனம் தொடங்கியது. மூன்று மாத காலம் அங்கே இருந்தோம் என்று நினைவு.

இவருக்கு அதிகம் பிடிக்காதது திரைப்படங்கள் பார்ப்பது! எங்கள் இருபத்தைந்து வருட தாம்பத்திய வாழ்க்கையில் நாங்கள் இருவரும் சேர்ந்து ஏறத்தாழ இருபது திரைப்படங்கள்தான் பார்த்திருப்போம். குழந்தைகளிடமும் இவ்விஷயத்தில் கண்டிப்பைக் காட்டுவார். ஆனால் வெளிநாடுகளிலும் சரி, வெளியூர்களிலும் சரி, காட்சி சாலைகள், பூங்காக்கள், மற்றும் முக்கிய இடங்களுக்கு அவராகவே உற்சாகத்துடன் அழைத்துப் போவார்.

இவர், இங்கிலாந்திலுள்ள ஜாயிண்ட் ஸ்டாஃப் சர்வீஸ் காலேஜுக்குப் பயிற்சி பெற ஓர் ஆண்டு காலம் சென்றபோது என்னையும் அழைத்துக் கொண்டு போய் விட்டார். இந்தச் சாக்கில் ஐரோப்பிய நாடுகள் எல்லாவற்றையும் பார்க்க எனக்கு வசதி செய்து கொடுத்தார். திரும்பி வரும்போது எதிர்பாராத விதமாக ஆப்பிரிக்க நாடுகள் சிலவற்றைப் பார்க்கவும் எங்களுக்கு வாய்ப்புக் கிடைத்தது. சூயஸ் கால்வாய் தகராறு ஆரம்பித்த சமயம். ஆகவே நாங்கள் ஆப்பிரிக்காவைச் சுற்றிக் கொண்டு திரும்பினோம். அப்போது ஆங்காங்கே இறங்கி வந்தோம்.

1961ம் ஆண்டு பிப்ருவரி மாதக் கடைசியில் இவருக்கு சிம்லா மலைப் பகுதியில் உள்ள கசோலி என்ற இடத்துக்கு டிரான்ஸ்பர் ஆர்டர் வந்தது. அப்போது நாங்கள் கூனூரை அடுத்த வெல்லிங்டனில் இருந்தோம். கசோலிக்கு நாங்கள் புறப்பட்டபோது எங்கள் ஊர்ப் பக்கமும் போய் விட்டு அப்படியே திருச்செந்தூருக்குப் போய் முருக தரிசனத்தையும் முடித்துக் கொண்டுதான் தில்லிக்குக் கிளம்பினோம்.

தில்லிக்குப் போகும் வழியில் ரயிலில் நான் ஒரு கனவு கண்டேன். அதில் முருகன் கோவில் குருக்கள் ஒருவர் தோன்றினார். 'வரும் வியாழக் கிழமைகளில் ஒன்றில் ஒரு முக்கியமான சம்பவம் நிகழும். ஆனால் அது நல்லபடியாக நடக்கும்' என்று அந்தக் குருக்கள் சொன்னதுபோல் இருந்தது. இந்தக் கனவை உடனே என் கணவரிடம் சொன்னேன். அந்தக் கனவு எப்படிப் பலித்தது என்று நாங்கள் சீக்கிரமே தெரிந்து கொண்டோம்.

பிப்ருவரி மாதம் இருபத்தி எட்டாம் தேதி கசோலிக்குப் போய்ச் சேர்ந்தோம். எங்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்த பங்களாவில் சாமான் கட்டுகளைப் பிரித்து ஒழுங்குபடுத்த ஆரம்பித்தோம். அந்த வேலையை முடிக்கு முன்பே ஐந்தாம் நாள் அவருக்குத் தில்லியிலிருந்து ஓர் அவசர அழைப்பு வந்தது. ஒழுங்குபடுத்தும் பொறுப்பை என் தலையில் கட்டிவிட்டு இவர் தில்லிக்குக் கிளம்பி விட்டார். இரண்டே நாட்களில் திரும்பி வந்து காங்கோவுக்குச் செல்லவிருக்கும் படைக்குத் தலைமை தாங்கும் பொறுப்பைத் தாம் ஏற்றுக் கொண்டு வந்துவிட்டதாகச் சொன்னார். மார்ச்சு மாதம் பத்தாம் தேதி வெள்ளிக் கிழமையன்று அவர் காங்கோவுக்கு விமானம் ஏறுவதாக ஏற்பாடு ஆகியிருந்தது. ஆனால் இவர் தம் பிரயாணத்தை ஒரு நாள் முன்னால் இழுத்துப் போட்டார். ஒன்பதாம் தேதி வியாழனன்றே புறப்பட்டு விட்டார், தில்லியிலிருந்து! காரணம் வெள்ளிக் கிழமை மேற்கே

பிரஸிடெண்ட்:
மேஜர் ஜெனரல்
**கே. ஏ. எஸ். ராஜா**

பேட்டியளித்தவர்:
அவரின் மனைவி
**ஸ்ரீமதி ராஜேசுவரி**

---

சூலம் என்பதால். இந்தச் சம்பிரதாயங்களை யெல்லாம் எங்கள் குடும்பத்தில் விடாமல் கடைப்பிடிப்போம். வெள்ளிக் கிழமை யன்று இவரை வழியனுப்பும் ஆவலுடன் விமான நிலையத்துக்குப் போன நண்பர்கள் ஏமாற்றத்துக்குள்ளானார்கள்.

நைஜீரியா, கானா, ஸ்வீடன், எத்தியோப்பியா, பாரதம் ஆகிய நாடுகளைச் சேர்ந்த மொத்தம் பதினேழாயிரம் படைவீரர்களுக்கு இவர் தலைவர். பதிமூன்று மாத



காலம் அங்கே இருந்தார். அரசியல் பேசாத நேரங்களில் இவர் ஷோம்பேக்கு நண்பர். மூன்று சந்தர்ப்பங்களில் மறைந்திருந்து இவரைக் கொலை செய்ய விரோதிகள் அங்கு முயற்சி செய்திருக்கிறார்கள். அந்த மூன்று சந்தர்ப்பங்களிலும் முருகன் அவரைக் காப்பாற்றி விட்டான். ஆம்! அவர் ஒரு முருக பக்தர். முருகன் படம் ஒன்றை எங்கு போனாலும் கூடவே எடுத்துப் போவார். அவர் பார்த்த களங்களை யெல்லாம் அந்த முருகனும் பார்த்திருக்கிறான். அவர் காங்கோவிலிருந்த பதிமூன்று மாத காலமும், ஐந்து வயதே நிரம்பிய என் சின்னப் பெண் அப்பாவுக்குத் தன் பிஞ்சு விரல்களால் ''முருகன் வேல் துணைக்கு வரும்'' என்று திருப்பித் திருப்பிக் கடிதம் எழுதுவாள்.

டென்னிஸ், கோல்ஃப் முதலிய விளையாட்டுக்களில் இவருக்கு ஈடுபாடு உண்டு. இவர் ஒரு வேட்டைப் பிரியரும் கூட!

ஏழு ஆண்டுகள் மேஜர் ஜெனரல் பதவி வகித்துவிட்டு ஐம்பத்து நான்கு வயது ஆகிவிட்டது என்ற நியதியில், இந்த ஆண்டு ஜனவரி மாதம் தான் ஓய்வு பெற்றார்.

ஒரே நாள் இரவில் தம் ஓய்வு காலத்தை எப்படிப் பயனுள்ளதாகச் செய்ய வேண்டும் என்ற முடிவுக்கும் வந்தார்! யுத்த களத்தில் எதிரிகளைப் பிடிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த இவர் மீன் பிடிக்கும் பணியில் தீவிரமாக இப்போது ஈடுபட்டிருக்கிறார்.

ஆம்! பத்து பெரிய மீன் பிடிக்கும் படகுகளை வாங்க ஏற்பாடு செய்தார். இப்போது எண்ணிக்கை பதினெட்டாக உயர்ந்துவிட்டது. சீக்கிரமே அவர் திட்டப்படி இருபத்தி நாலாகும். பெரிய அளவில் நல்ல ரக மீன்களை வெளிநாடுகளுக்கு அனுப்ப ஏற்பாடாகிறது. இந்த நிறுவனத்தில் வேலை செய்ய முன்னாளைய படை ஊழியர்களைத் தான் தேர்ந்தெடுக்கிறார். கட்டுப்பாடும் நாணயமும் அவர்களிடம் நிச்சயம் உருவாகியிருக்கும் என்ற நம்பிக்கை இவருக்கு.

வைஷ்ணவ சம்பிரதாயத்தைத் தீவிரமாகப் பின்பற்றும் ராஜபாளையத்தார் குடும்பம் ஆனாலும் இவருக்கு நெஞ்சத்தில் முருகன் நினைவும், நெற்றியில் விபூதியும் முக்கியமானவை!

பேட்டி:
**கோமதி சுவாமிநாதன்**

# ஒவ்வொருவரின் மேனிக்கும் பாதுகாப்பு தேவை






வியர்வை துர்நாற்றத்திலிருந்தும், அதனால் நுண்ணிய கிருமிகளிட மிருந்தும் உங்களுக்கும், மற்றவர்களுக்கும் ஏற்படும் சங்கடத்தி லிருந்தும் பாதுகாப் பளிக்கிறது.

ஜி-11 கலந்து **சிந்தால் டாய்லெட் பவுடர்** இந்தப் பாதுகாப்பைத் தருகிறது. அதோடு...அன்றலர்ந்த மலரின் நறுமணத்தையும் தருகிறது.

**சிந்தால்** துர்நாற்றத்தை அறவே போக்கிப் பாதுகாப்பளிக்கும் டாய்லெட் பவுடர்.

Interpub/GSP-6/72R Tam

## மனம் திருந்தினேன்

"மிஸ்டர் பட்டாபி! நீங்கள் பல வருடங்களாகச் சீட்டு...." கேள்வியை முடிக்காமல் தயங்குகிறேன்.

"ஆடிக் கொண்டிருந்தேன்; இப்போது நிறுத்தி விட்டேன்!" என்றார் பட்டாபி, மகிழ்ச்சியுடன்.

திரு பட்டாபியின் முன் தலையில் நரை கண்டுவிட்டது. வயது நாற்பத்தைந்துக்கு மேலிருக்கும். பெரிய சம்சாரி. வரும்படிக்கும் குறைவில்லை.

"சுமார் எவ்வளவு வருடங்கள் நீங்கள் சீட்டாட்டத்தில் ஈடுபட்டிருந்திருப்பீர்கள்?"

"ஈடுபட்டிருந்தேனா? 'வெறி' பிடித்திருந்தது என்று சொல்வதுதான் பொருத்தமாயிருக்கும்! பதினைந்து வயதிலேயே 'முந்நூற்று நாலு' ஆடக் கற்றுக் கொண்டேன். எஸ். எஸ். எல். சி. தேர்வு எழுதப் பத்து நாட்கள் இருக்கும்போது என் தோழர்களுடன் 'ஐந்நூற்று நாலு' ஆடியிருக்கிறேன் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். என்னுடைய சீட்டாட்ட அனுபவத்துக்கு வெள்ளி விழாக்கூட ஆகிவிட்டது!" என்று கூறிவிட்டுச் சிரிக்கிறார் அவர்.

"இளமையிலேயே இந்தப் பழக்கம் எப்படி ஏற்பட்டது உங்களுக்கு?"

"சகவாச தோஷம்தான்! சூழ்நிலை அப்படி அமைந்தது. கிராமத்தி லிருந்து படித்துக் கொண்டிருந்தேன். எங்கள் கிராமத்துப் பிள்ளைகள் சிலர் 'கையில் சீட்டுக் கட்டுடன் பிறந்தவர்கள்'! பன்னிரண்டு வயதிலேயே ரங்காட்டத்தில் நிபுணர்களாக இருந்திருக்கிறார்கள் பலர்! ரங்காட்டம் என்றால் 'மூணு சீட்டு!' அந்தக் கிராமத்துப் பையனாக இருந்து கொண்டு கேவலம் 'முந்நூற்று நாலு', 'ஐந்நூற்று நாலு' கூட ஆடத் தெரியவில்லை என்றால் அது அவமானத்துக்குரிய விஷயம், சார்!"

"அப்போதே காசு வைத்து ஆடுவது உண்டா?"

"படிக்கும்போது காசு வைத்து ஆடியது இல்லை. தோற்றவர்களுக்கு 'ஜாக்கி' கொடுப்பது வழக்கம்! 'ஜாக்கி'ச் சீட்டைக் கையில் வைத்துக் கொண்டு தலையில் மேல் துண்டால முண்டாசு கட்டிக் கொண்டு ஜெயித்தவர்களைச் சுற்றி வரவேண்டும்! பின்னால் படிப்பை முடித்த பிறகு வேலையில் அமர்ந்து கல்யாணம் செய்துகொண்டு வாழ்க்கை நடத்த ஆரம்பித்தபிறகுதான் காசு வைத்து ஆடத் தொடங்கினேன்."

"உங்களுடைய சொந்த ஊர் எது?"

"ஊருக்கு என்னால் களங்கம் ஏற்பட வேண்டுமா? வேண்டாம், சார்! தஞ்சை மாவட்டம். அதோடு விட்டுவிடலாமே?"

"சரி; உங்கள் பெற்றோர்கள், உறவினர்கள் யாரும் உங்களைக் கண்டித்ததில்லையா?"

"சீட்டு ஆடுறது பற்றியா? அதை ஒரு கௌரவமாகக் கருதிய குடும்பத்தில் பிறந்தவன் நான்! என் தாத்தா கையில் டெமி பேப்பர், ரெவின்யூ ஸ்டாம்புடன் சீட்டாட உட்காருவாராம்! இதெல்லாம் எதற்கு என்று கேட்கிறீர்களா? மூணு சீட்டு ஆட உட்கார்ந்தால், அந்தக் கோஷ்டி தொடர்ந்து இரண்டு மூன்று நாட்களுக்குக் கலையாமல் இருக்குமாம்! இரவு பகல் என்று கணக்கே இல்லை. என் தாத்தாவின் அருகில் வெற்றிலைப் பெட்டி இருக்கும். அதில் கத்தை கத்தையாகப் பணம்

# ஒன்று செய்தார், நன்று செய்தார், அன்றே செய்தார்!







இருக்குமாம். பணம் தீர்ந்து போய்விட்டால் ஸ்தலத்திலேயே 'புரோ நோட்' எழுதிக் கொடுத்துக் கடன் வாங்கிக் கொள்ளுவாராம். தொடர்ந்து ஆட! எழுந்து போய் வீட்டிலிருந்து பணம் எடுத்து வரக்கூட மனம் இராதாம் அவருக்கு!''

''அடேயப்பா! அவ்வளவு ருசியா அதில்?''

''ஏழு, எட்டு வேலி — இரு போகங்கள் விளையும் நிலம் — தாத்தாவின் காலத்திலேயே கரைந்து கைமாறி விட்டது என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்!'' என்று சிரித்தவாறு கூறிவிட்டு வெற்றிலை போடுவதில் முனைகிறார் திரு பட்டாபி.

''நீங்கள் சீட்டாட்டத்தில் என்னென்ன ஆட்டங்கள் விளையாடுவது வழக்கம்? இதில் உங்களுடைய லாப-நஷ்டக் கணக்கு எப்படி?''

''எல்லா ஆட்டங்களும் தெரியும். கடைசி ஐந்தாறு வருடங்கள் 'ரம்மி'தான் நிறைய விளையாடியிருக்கிறேன். 'போக்கர்' (Poker) என்ற ஐந்து சீட்டு ஆட்டம் கூடத் தெரியும். 'பிரிட்ஜ்' விளையாடவும் தெரியும். நான் ஆடாத ஆட்டமே இல்லை! 'கிளப்'பில் வெள்ளிக் கிழமை இரவு தொடங்கித் திங்கட்கிழமை வரை விடிய விடிய ஆடியிருக்கிறேன். சாப்பாடு, டிபன் எல்லாம் இருந்த இடத்துக்கே வந்துவிடும். லாப — நஷ்டக் கணக்கு என்று எதுவும் நான் பார்த்ததில்லை. ஆனால் மொத்தத்தில் நஷ்டம்தான்.''

''இரண்டு நாட்கள் தொடர்ந்து ஆடுவதில் அலுப்பு ஏற்படுவதில்லையா?''

''அலுப்பா? நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? திண்ணையில் உட்கார்ந்து சீட்டு விளையாடிக் கொண்டிருந்த ஒருவனிடம் 'உன் தாயார் இறந்து விட்டாள்' என்று சேதி சொன்னானாம் ஒருவன். அவன் இருந்த இடத்தை விட்டு எழுந்திராமலே, 'இந்த வழியாகத்தானே **எடுத்துக் கொண்டு** போவார்கள்? வந்து கலந்துகொள்ளுகிறேன்' என்று கூறிவிட்டு ஆட்டத்தில் தொடர்ந்து ஈடுபட்டானாம். அந்த அளவுக்குப் போதை தரக் கூடியது சீட்டாட்டம். குடியை விட மோசம்! குடிப்பவன் கூட வயிறு முட்டக் குடித்த பின் நிறுத்திவிடுவான். சீட்டாட உட்கார்ந்து விட்டால் நிறுத்தவே முடியாது! அதற்கு முடிவே இல்லை! நானும் அப்படி விளையாடினேனா என்று ஆச்சரியமாயிருக்கிறது இப்போது நினைத்துப் பார்த்தால்!''

திரு பட்டாபி சீட்டாடுவதை நிறுத்தி இரண்டு வருடங்கள் ஆகின்றனவாம். எப்படி நிறுத்த முடிந்தது? படிப்படியாகக் குறைத்துக்கொண்டே வந்து இறுதியில் விட்டு விட்டாரா? அல்லது...? அவரே விளக்குகிறார்:

''திருமணமான புதிதில் சில வருடங்கள் விடுமுறை நாட்களில் மட்டும் நான் சீட்டாடுவேன். அதுவும் இரண்டு மூன்று மணி நேரந்தான். படிப்படியாக ஆட்ட நேரம் வளர்ந்தது. லீவு நாட்களில் சாப்பிட்டவுடன் கை ஈரம் உலருவதற்கு முன்பே வீட்டை விட்டுக் கிளம்பி விடுவேன். இரவு ஒன்பது, பத்து மணிக்கு மேல் ஆகிவிடும் நான் வீடு திரும்ப. என் மனைவி என் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்து ஏமாற்றம் அடைவதும் வழக்கமாகிவிட்டது! 'சீக்கிரம் வந்துவிடுங்கள்; இன்று சபாவில் கச்சேரி இருக்கிறது' என்று நினைவுபடுத்துவாள். நான் 'சரி' என்று தலையாட்டிவிட்டுக் கிளம்புவேன். அந்த 'ஜோதி'யில் கலந்து கொண்டு விட்டால் அப்புறம் சினிமா, சங்கீதம், கச்சேரி போன்ற மற்ற நினைவுகளுக்கெல்லாம் இடமேது? வழக்கம் போல் இரவு பத்து மணிக்கு வீடு திரும்பியதும் சாப்பாட்டை நானே எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடுவது சகஜமாகி விட்டது. நான் குடும்பத்தவர்களுடன் சேர்ந்து கடற்கரைக்கோ, கோயிலுக்கோ ஏன், கல்யாணங்களுக்குப் போவது கூட அரிதாகி விட்டது. குடும்பச் செலவுக்குப் பணம் கொடுத்துவிடுவேன். சில சமயங்களில் குடும்பச் செலவுக்கான பணமும் ஓரளவு சீட்டாட்டத்தில் கரைந்துவிடும். மனைவிக்கும் எனக்கும் 'கசமுச' தொடங்கியது. நான் சீட்டாடுவது என் மனைவிக்கு மட்டுமே தெரியும் என்ற நிலை நாளடைவில் மாறியது. குழந்தைகள் பெரியவர்களானவுடன் என் 'விவகாரம்' அவர்களுக்கும் தெரிந்து விட்டது. குடும்ப அமைதி, மகிழ்ச்சி என்னும் சீர்குலைந்து வருகிறது என்பதை உணர்ந்தும், என்னால் சீட்டாட்ட மோகத்தை உதறி எறிய முடியவில்லை....''

''சீட்டாட்டத்தை நிறுத்தியே ஆகவேண்டும் என்ற உறுதி உங்களுக்கு ஏற்படக் காரணமான நிகழ்ச்சி ஏதாகிலும் உண்டா?''

''அதைத்தான் சொல்லவிருந்தேன். என் பையன் 'எஸ். எஸ். எல். சி. தேர்வுக்குப் பணம் கட்ட ஒரு வாரம்தான் இருக்கிறது' என்று சொல்லியிருந்தான். அதற்கென்று ரூபாய் பதினைந்து தனியாக எடுத்து வைத்திருந்தேன். பணம் கட்டுவதற்கான தேதிக்கு இரண்டு நாட்களுக்கு முன்பு அந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு 'கிளப்'புக்குப் போய்விட்டேன்! பணம் போனாலும் இரண்டு நாட்களுக்குள் எப்படியும் ஒரு பதினைந்து ரூபாய் புரட்டிவிடலாம் என்ற நம்பிக்கை. அன்று அந்தப் பணம் முழுவதையும் தோற்று விட்டேன். ஆனால், இரண்டு நாட்களுக்குள் பதினைந்து ரூபாய் சேகரிப்பதற்குள் எனக்கு விழி பிதுங்கி விட்டது! நண்பர்களிடமிருந்து வரவேண்டிய தொகை நிறைய இருந்தும், பணம் ஏதும் கைக்கு வரவில்லை. சீட்டாட்ட கோஷ்டியினர் யாரும் அந்த நெருக்கடியான சமயத்தில் எனக்கு உதவவில்லை!''

''அப்புறம் நிலைமையை எவ்வாறு சமாளித்தீர்கள்?''

''என் மனைவியின் தங்க வளையலை மார்வாடியிடம் வைத்துப் பதினைந்து ரூபாய் கடன் வாங்கிக் கொண்டு என் மகன் படித்த பள்ளிக்கூடத்துக்குப் போனேன். பள்ளியில் என் கண்ணில் பட்ட வாசகம் என் மனத்தில் ஆழப் பதிந்தது. 'ஒன்று செய்; நன்று செய்; அதை இன்று செய்!' என்ற அந்த வாசகம் எனக்காகவே எழுதி வைக்கப் பட்டிருந்த மாதிரி இருந்தது. 'இனி சீட்டைக் கையால் தொடுவதில்லை' என்று அந்த இடத்திலேயே தீர்மானம் செய்து கொண்டேன். இரண்டு வருடங்களுக்கு மேலாகிறது. சீட்டுக்குத் தலைமுழுகி! என் உறுதி இனி என்றுமே குலையாது'' என்று உறுதி தொனிக்கக் கூறுகிறார் பட்டாபி. வாழ்க அவரது உறுதி!

**(பெயர் மட்டும் கற்பனை)** பேட்டி: **'பாணன்'**

பவுடரினால் துலக்கிய
பாத்திரத்தின் மீது பொடிக் கசடு
பின்தங்கியிருக்கிறதா?

# மாசில்லாத பளபளப்பை
# வீசிட வைப்பது
# விம்.




**கசடு இல்லை!**

**பிசுக்கு இல்லை!**

**கீறல் இல்லை!**

# சூரியகாந்தி

**சூரியகாந்திப்பூ சூரியனையே நோக்கி நிற்பதுபோல் படாதிபதிகள் நல்ல கதையையே நோக்கி நின்றால் நல்ல படங்களை ரஸிகர்கள் எதிர்பார்க்கலாம்.**

இப்படத்தின் பெயர் புதுமையா யிருப்பதுபோல் கதையும் சற்றுப் புதுமையானது தான்; வழக்கமான பாதையிலிருந்து சற்று மாறி யிருக்கிறது. தாழ்வு மனப்பான்மையினால் தவிக்கும் ஆண்மகன் தன் மனைவியைக் கண்டே ஆத்திரமடைகிறான். அதுதான் கடைசி வரையில் கதையைக் கொண்டு போகிறது.

மோகனும் ராதாவும் சந்திக்கும் விதமே புதுமாதிரியாயிருக்கிறது. வீட்டு ஜன்னல்கள் மூலமே இருவரும் சந்தித்து, சைகைகள் மூலமாகவே காதலை வளர்த்துக் கொண்டு கடைசியில் பெற்றவர்கள் சம்மதத்தோடு சிரமம் எதுவும் இல்லாமல் சுலபமாக மணம் புரிந்து கொள்கின்றனர். காதலிக்கும்போது தோன்றாத சிக்கல் மணமான பிறகு தோன்றிப் படிப்படியாய் வளர்ந்து கசப்பை உண்டாக்கிவிடுகிறது. திடீரென்று தோன்றும் வழக்கமான திரைக் கதை அசம்பாவிதங்கள் எதுவும் இல்லாமல் கதையைக் கொண்டு போயிருக்கும் முறையே பாராட்டுக்குரியது தான்.

முத்துராமன் நடிப்பு எந்த இடத்திலும் செயற்கையாக இல்லாமல் இருப்பது நிறைவைத் தருகிறது.

ஜெயலலிதாவுக்குச் சற்று மாறுதலான பாத்திரம்தான். கண்ணீர் விட்டுக் கலங்கவும் கணவனின் பராமுகத்தையும், கடு சொற்களையும் பொறுமையாகச் சகித்துச் சரிக்கட்டிக் கொண்டு போகவும் நேருகிற சந்தர்ப்பங்களில் அவர் நடிப்பு மிகவும் இயல்பாயிருக்கிறது; சொந்தக் குரலில் இரண்டு பாட்டுக்கள் பாடவும் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. அதை நன்றாய்ப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். ஜெயலலிதா வெறும் சோக சித்திரமாக ஒரு படத்தில் தோன்றினால் ரசிகர்களுக்கு மனநிறைவு ஏற்படாது என்றுதானோ என்னவோ அவர் 'சிக்' உடையில் அரை நிஜாரோடு தோன்றி 'டுயட்' பாடி ஆடுகிறார். இது ஓல்ட் வேவ்—1.

நகைச்சுவைக் காட்சிகள் படத்துக்குத் தேவைதான். அதற்காக மட்டமான தமாஷ்களைப் புகுத்திக் கழுத்தை அறுப்பது தகுமா? 'உன் காணாமற்போன கணவன் இவன்தான்' என்று எவனோ ஒருவனை ஒருத்தி முன் கொண்டு வந்து நிறுத்தி அவமானப்படுத்துவதும், அவள் அவனை 'ஆத்துக்காரா' என்று அழைத்து மட்டமாகப் பேசுவதும் என்ன நகைச்சுவையோ, என்ன வேதனையோ! இது ஓல்ட் வேவ்—2. படங்களில் நல்ல நகைச்சுவைக் காட்சிகளுக்குப் பஞ்சம் வந்துவிட்டதே! இந்தக் காட்சியில் சிறந்த நகைச்சுவை நடிகர்களான 'சோ'வையும் மனோரமாவையும் பார்க்கும்போது, 'ஐயோ, இவர்கள் திறமை இப்படி வீணாகப் போகிறதே' என்று வருத்தப்படாமல் இருக்க முடியவில்லை.

மோகனின் தங்கை மணமாகும் முன்பே தாய்மை அடைவதும், குடும்ப கௌரவத்துக்கு அஞ்சி அதை ராதா மூடி மறைத்து அவர்கள் திருமணத்துக்கு ஏற்பாடு செய்வதும் திரைக் கதையின் 'சஸ்பென்ஸ்'. இது எதற்கு என்று முகம் 'சுளிப்பதில் பயனில்லை. இது ஓல்ட் வேவ்—3. இவைபோன்ற ஓல்ட்வேவ் கருத்துக்களை எப்படியாவது படத்தில் சேர்ப்பது திரை உலக நியதி!

எம். ஆர். ஆர். வாசு மிகவும் நல்லவனாக வருகிறார். மகன் சாப்பிடும் காப்பியிலிருந்து கணக்கெழுதி வைத்து நிச்சயதார்த்த நேரத்தில் மொத்தமாகப் பெண் வீட்டாரிடம் அந்தத் தொகையை வசூல் செய்யும் அளவுக்குக் கடுமையான சுபாவம் உள்ளவராக வந்தாலும் கடைசியில் கணவன் — மனைவி பிணக்கைத் தீர்த்து வைத்துப் படத்தை மங்களகரமாக முடித்து வைக்கிறார்.

ஏ. எஸ். பிரகாசம் எழுதிய வசனம் ஆங்காங்கே சிறப்பாயிருக்கிறது.

படத்தின் விறுவிறுப்பான ஓட்டத்துக்கு டைரக்டர் சீனிவாசனைப் பாராட்ட வேண்டும். மனோரமா பாடியிருக்கும் ''தெரியாதோ நோக்கு'' என்ற பாடலைப் படமாக்கியிருக்கும் விதம் நன்றாயிருக்கிறது. ''பரமசிவன் கழுத்திலிருந்து'' என்ற கண்ணதாசனின் பாடல் நல்ல பொருட்செறிவுடன் விளங்குகிறது.

சூரியகாந்தி நறுமணம் பரப்பவில்லையே என்று புலம்பி என்ன பயன்? அழகா யிருக்கிறது என்ற மட்டோடு திருப்தி அடைய வேண்டியதுதான்.

—காந்தன்



அமரேசனை அனைவரும் பாராட்டினார்கள். சந்திரமௌளியும் பாராட்டினான். சும்மாவா பின்னே! இடைவேளைக்கும் தேநீர் வேளைக்கும் இடையே அமரேசன் எவ்வளவு அழகாக, பொறுமையாக ஆடி இந்தியக் குழுவின் சரிவைத் தடுக்க முயன்று வந்தான்! அவனுடைய ஸ்கோர் பிரமாதமல்ல. முப்பத்தைந்து ரன்களே. ஆனால் ரன் எடுத்த விதம்! பிரியாவும் மற்றப் பெண்களோடு சேர்ந்து கொண்டு




அமரேசனைச் சுற்றிச் சுற்றி வந்து குதித்தது தான் சந்திரமௌளிக்குப் பொறுமையாக இருந்தது.

பிரியா! நீயா? என்னை விட்டுப் பிரிகிறாயா? பிரியா தன்னிடமிருந்து அகன்று வருவதாகச் சந்திரமௌளி எண்ணினான். கொஞ்ச நாட்களாகவே அவளுக்கு அமரேசனின் பாட்டிங் பற்றியே பேச்சு! அமரேசனுக்கு இப்போது நல்ல 'பார்ம்'. தொட்டதெல்லாம் துலங்குகிறது. சந்திரமௌளிக்கோ இழப்புக் காலம். 'அவுட் ஆஃப் பார்ம்.' அடுத்த டெஸ்டில் விளையாட வாய்ப்புக் கிடைக்குமா? ஸ்டேடியத்தில் கூடியுள்ள அத்தனை பேருக்கு மட்டுமல்ல. அவனுக்கே கூட ஐயம் வந்துவிட்டது!

அமரேசன் அவனுடைய வகுப்பு நண்பன். இருவரும் பந்தடிப்பதில் சூரர்கள். அண்மைக் காலம்வரை ஒருவருக்கொருவர் இளைத்தவர்களல்லர். ஆனால் அமரேசனே எப்போதும் சிறப்புப் பெற்று வந்தான். முதலில் கல்லூரிக் குழுவின் தலைமை, அடுத்துப் பல்கலைக் கழகக் குழுவின் தலைமை, பிற்பாடு ரஞ்சிக் கோப்பைக் குழுவின் தலைமை என வாய்ப்புக்கள் அமரேசனையே அடைந்தன. சீனியாரிட்டி வகையில் இருவருமே ஒரே நிலையில் இருந்தும், அமரேசன் தொடர்ந்து சிறப்புக்களை அடைந்து வருகிறான். வருங்கால டெஸ்ட் குழுவுக்கும் தலைமை வகிக்க அவன் தான் ஏற்றவன் என்று பரவலான கருத்து உலாவுகிறது. எல்லாம் போகட்டும், கவலையில்லை. —

பிரியாவை இழப்பதுதான் சந்திரமௌளிக்கு முடியாத காரியம். அவள், அவனுடைய வருங்கால சுக வாழ்வுக்கு உரைகல்.

# கிரிக்கெட் ரஸனையில்...

அவளில்லாத அவனுடைய வாழ்வு நரகம். அவன்மீது அவள் எவ்வளவு உயிராக இருந்தாள்! மாறிவிட்டாளே! அமரேசன் மீது வெறி பிடித்த இரசிகையாகி விட்டாளே! வெறும் ரசிப்பு என்று நிற்காமல் காதலாக முற்ற நாட்களாகப் போவதில்லை.

இடைவேளைக்குப் பின்பு. மூன்று விக்கெட்டுகள் மளமளவென்று வீழ்ந்து விட்டன. சந்திரமௌளி 'த்ரீ டவுன் பேட்ஸ்மன்'. அவன் திடமாக ஆடத்தான் உறுதி பூண்டிருந்தான். ஆனால் என்னவோ அவுட் சைட் தி ஆஃப் ஸ்டம்ப் பந்து மீது அவன் நாட்டம் கொண்டு அடிக்க எண்ணியிருக்கக் கூடாது. மட்டையை நீட்டி விட்டான். மிக எளிதான காட்ச் ஆகிவிட்டது. மூன்றாந்தரக் கிளப் பாட்ஸ்மன் கூட அப்பந்தைத் தவிர்த்திருப்பான். போன சூட்டோடு சந்திரமௌளி பெவிலியனுக்குத் திரும்பினான். கூடியிருந்த நாற்பதாயிரம் பேர்களில் அவனைக் கேவலமாகத் திட்டாதவர்கள் எதிர்த்தரப்பினரும், அம்பயர்களும் மட்டுமே! பெவிலியனை நோக்கி அவன் நடந்த தூரம் நடக்க நடக்க நீண்டது. பொறுப்பில்லாமல் ஆடினால் யார் அவனைத் தாங்க முடியும்? எப்படியோ பெவிலியனுக்கு வந்து சேர்ந்தான். அதே நேரத்தில்

ஒன் டௌன் பாட்ஸ்மன் ஆன அமரேசன் மிக மிக விழிப்புடன் ஆடிக்கொண்டிருந்தான். சந்திரமௌளி ரன்களைக் குவிக்க முயலாமல் விழிப்புடனும் பொறுப்புடனும் ஆடியிருந்தால் அவனைத் தலைக்கு மேல் வைத்துக் கொண்டாடி யிருப்பார்கள்.

பிரியா அவன் மனத்தில் ஏற்படுத்திவிட்ட கலக்கத்தின் பலன். கடந்த இரண்டு டெஸ்ட்களில் அமரேசனுடைய பாட்டிங் பற்றி அவன் முன்பே வாய் வலிக்கப் பேசிப் பேசிச் சந்திரமௌளியின் மனத்தைக் கலக்கிவிட்டான். கான்சென்ட்ரேஷன் அறவே இல்லை.

ஆட்ட முடிவு நேரம் வந்தது. கூட்டம் கலைய ஆரம்பித்து விட்டது. டிரஸ்ஸிங் அறையில் சந்திரமௌளி ஒடுங்கி யிருந்தான். தனக்கு இதுவே கடைசி டெஸ்ட் என்ற எண்ணம் ஒரு புறம். பிரியாவின் மனமாற்றத்தின் பாரம் ஒரு புறம். முகத்தில் ஈயாடவில்லை.

''மௌளி... என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்றார், உள்ளே நுழைந்த காப்டன்.

''நதிங், காப்டன்!''

''ஏன் உற்சாகமில்லாமல் இருக்கிறீர்கள்? டோன்ட் ஒர்ரி... நம்மால் முடிந்தவரையில் ஆடிப் பார்க்கலாம். யு கேன் டூ வெல்...'' என்று உற்சாகம் தந்தார் காப்டன்.

''என்னை மன்னிக்கணும், காப்டன்... இன்று நான் ஆடிய முறை மிக மிக மட்டமானது...''

# •• முரண்பாடு

**கா. ப. ரா**

''சிலபோது அப்படித்தான் நேர்கிறது, மௌளி. உங்களை ஏதோ ஒரு பிரச்னை அரிக்கிறது. கையில் பேட் ஏந்தியதும் வேறு கவலைக்கு இடமே தரக் கூடாது... இன்றிரவு உங்கள் வீட்டுக்கு நீங்கள் போகலாம். அமரேசனும் அனுமதி கேட்டிருக்கிறார். காலை ஒன்பது மணிக்கே இங்கே வந்து விடுங்கள்.''

அமரேசனும் சந்திரமௌளியும் சென்னையைச் சேர்ந்தவர்கள். எனவே அவர்கள் தம் வீட்டுக்குச் செல்லத் தனி அனுமதி தந்தார் காப்டன்.

''டேய் மௌளி... புறப்படலாமாடா?'' என்றபடி அமரேசன் அவ்வறைக்குள் வந்தான். மௌளியின் வீடு நுங்கம்பாக்கத்தில், அமரேசனுக்குக் கோடம்பாக்கத்தில்.

''போகலாண்டா...''

''கோபியின் கார் நமக்காகக் காத்திருக்கிறது.... காப்டன் சார்! நாங்கள் புறப்படலாமா?''

''எஸ்...''

ஏழு மணி.

தனிமை; தனிமை. பையனுக்கு 'மூட்' சரியில்லை என்று பெற்றோர்கள் ஒதுங்கியே யிருந்தனர். அவர்களுக்குக் கிரிக்கெட் பற்றி ஒன்றும் தெரியாது.

''மௌளி...'' யார் அழைப்பது?

பிரியா!

அவளுக்கு இங்கென்ன வேலை? அமரேசன் வீட்டுக்குச் சென்று கூத்தாடட்டுமே!

கதவைத் திறந்தான். பிரியாவின் கண்கள் சிவந்திருந்தன.

''என்ன....?''

''உங்களைப் பார்த்துட்டுப் போகலாம்னு!''

''என்னைப் பார்த்துப் பேச என்ன இருக்கிறது? நான் டக் அடித்த விதம் பற்றிப் பேசணுமா...?''

அவள் அழுதுவிட்டாள். ''மௌளி... மௌளி...'' என்றுதான் சொல்ல முடிந்தது.

''இதோ பார் பிரியா... இப்போதைக்கு எனக்குத் தனிமைதான் வேண்டும். நீ போய் வா... உன்னுடைய பாராட்டுக்கு உரியவர்கள், உன் வருகைக்காக, உன் பாராட்டுக்காகக் காத்திருப்பார்கள்'' என்றபடி மௌளி தன் அறைக் கதவை மூடிக் கொண்டான்.

ஃபாலோ ஆன்.

தவிர்க்க முடியவில்லை. — அமரேசன் நன்கு ஆடியும் இடைவேளைக்கு முன்னே மறுபடியும் பாட்டிங் செய்ய வேண்டியதாயிற்று. 'பிட்ச்' இடக்குச் செய்ய ஆரம்பித்து விட்டது.



ஒன்று — இரண்டு — மூன்று — மூன்று விக்கெட்டுகள் அறுபது ரன்களுக்குள் வீழ்ந்து விட்டன. —அமரேசன் உட்பட. நாற்றிருபது ரன்களை மேலும் எடுத்தால்தான் இன்னிங்ஸ் தோல்வியைத் தடுக்க முடியும். ஓபனிங் பாட்ஸ்மன் ஆன காப்டன் உயிரைக் கொடுத்து ஆடிக் கொண்டிருந்தார். அமரேசன் ஒரே ரன் எடுத்துத் திரும்பினான். யாரும் அவனைப் பாராட்டவில்லை. 'மடையன்' என்றவர்கள் எத்தனையோ பேர்!

சந்திர மௌளி க்ளவுஸ் மாட்டிக்கொண்டு புறப்பட்டான்.

அவனிடமிருந்து யாரும் அதிகமாக இப்போது எதிர்பார்க்கவில்லை. குழுவிலிருந்து கழிக்கப்படவிருக்கிறவன் அவன்.

எதிரே வந்தார் காப்டன். அவன் தோள்களை ஆதுரத்துடன் பற்றினார். ''மௌளி... உனக்கு என்று 'தரம்' ஒன்று உள்ளது.... அதைக் காப்பாற்ற வேண்டாமா? இது உன்








னுடைய ஹோம் கிரௌண்ட்... எக்ஸ்ட்ரா இன்ஸ்பிரேஷன் வரணுமே...'' என்றார்.

''ஐ வில் ட்ரை மை லெவல் பெஸ்ட், சார்!''

''ரன் எடுக்க அவசரப்பட வேண்டாம். ஒரு பக்க விக்கெட்டைக் காப்பாற்றிக் கொண்டால் போதும். மீதியை நான் பார்த்துக் கொள்கிறேன்.''

''சரி, காப்டன்!''

மட்டையைப் பார்த்தான்.

'வாழ்வு கொடு! நீதான் என் மானத்தைக் காப்பாற்றணும்... எனக்கு இந்த உலகிலே யாருமே துணை இல்லே... நான் அனாதை... நீயும் என்னைக் கைவிட்டு விட்டால் என் கதி என்னாவது?'

காப்டன் சொன்னபடியே சந்திரமௌலி ரன்கள் எடுக்க முயலவில்லை. நான்கு ஓவர்கள் மெய்டன். அடுத்த ஓவரில் ஒரு ரன். டக் காப்பாற்றப்பட்டது.

இடைவேளை கழிந்தது. ஆட்டம் ஆரம்பமாயிற்று.

மௌலி ஒரு முனையைக் காத்துக்கொண்டால் போதுமென்று சொன்ன காப்டனே வியக்குமாறு சந்திரமௌலி ரன்களைக் குவிக்க ஆரம்பித்தான். வேகமாக அல்லதான். பொறுப்புடன், விழிப்புடன். எதிர்த்தரப்பினர் வீசிய பௌன்சர்கள், யார்க்கர்கள், ஸ்விங்கர்கள், கூக்லிகள், ஆஃப் பிரேக்குகள்... அவனை அசைக்க முடியவில்லை. தொடாமல் விடவேண்டிய பந்துகளை நெருங்காமல், லூஸ் பந்துகளைப் பவுண்டரிகளுக்கு அனுப்பி ஸ்கோர்களைக் கறுகறுப்பாக்கினான்.

தேநீர் வேளை வந்தது.

இன்னிங்ஸ் தோல்வி தவிர்க்கப்பட்டது.

காப்டனுக்கு 'பேஸிவ்' ரோல்தான் வாய்த்தது. மௌலி தாக்கி ஆட ஆரம்பித்தான்.

ஆட்ட முடிவில் மௌலி நூற்றிருபது ரன்கள் எடுத்துவிட்டான். காப்டன் எண்பதே ரன்கள். இன்னும் இரண்டு நாட்கள் ஆட்டம் உள்ளது. மௌலி விடப் போவதில்லை. முடிந்தவரை போராடத்தான் போகிறான்.

கைஒலிகள், சீழ்க்கைகள், பாராட்டுகள், அரவணைப்புக்கள்... ஹீரோ வொர்ஷிப்!

''ஐயாம் வெரி ப்ரௌட் ஆப் யு'' என்றார் செலக்டர் ஒருவர்.

நண்பனைத் தழுவிக் கொண்டு ''டேய்... டேய்'' என்றுதான் சொல்ல முடிந்தது அமரேசனால்.

டிரஸ்ஸிங் அறை வரைகூடப் பாவையர் கூட்டம் அவனைப் பின்தொடர்ந்து வந்தது. ராஜேஷ் கன்னாவிடம்கூட இந்தளவு ரசிப்பு அவர்களுக்கு இருக்காது போலும். ஆட்டோகிராப் வாங்கப் போட்டி!

நேற்று அமரேசனிடம் அப்படி ஒட்டிக் கொண்ட பிரியாவை அவன் காணவில்லை. அவள் எங்கே? அவன் கண்கள் கூட்டத்தைத் துழாவின. அவளைக் காணவில்லை. எத்தனை எத்தனையோபேர் அவனைப் பாராட்டினார்கள். எதிர்க் கட்சிக் காப்டன் கூட அவனைப் பாராட்டிவிட்டுப் போனார். அமரேசனின் ரசிகை எங்கே?

தன்னைச் சுற்றி வழிபாடு நடப்பதை அவன் இதயம் உணரவில்லை. அவன் முகத்தில் செயற்கைச் சிரிப்பு. இயந்திர கதியில் கை குலுக்கினான்.

முகங் கழுவி, ஆடைகளை அணிந்து கொண்டு வெளியே வந்தபோது, பிரியா அவன் முன்னே வந்தாள்.

''மௌலி... மௌலி...''

அவன் மார்பில் சாய்ந்து கொண்டு அழுதாள் அவள்!

'ஏண்டி அழுகிறாய்? செஞ்சுரி எடுத்தேன் என்றா? 'டக்'கில் அவுட்டாகவில்லை என்றா? போகிற போக்கில் எனக்கு டெஸ்ட் குழுவில் இடம் உறுதியாகி விட்டது என்றா? காப்டன் பதவி பெறுவதில் நான் அமரேசனுக்குப் போட்டி என்றா?'

வாய் விட்டுக் கேட்கவில்லை.

சட்டென்று அவனுக்கு ஒரு விஷயம் புலப்பட்டது.

நேற்று அவன் 'டக்' எடுத்தபோதும் அழுதவள் இவள். இன்று வெற்றியிலும் அழுகை ஏன்? அமரேசன் நன்றாக ஆடுகிறபோது மற்ற ரசிகைகள் போல ரசிகை என்ற அளவில்தான் அவளும் கூத்தாடலாம். அவ்வளவே. அமரேசன் தோல்விக்காக அவள் அழவில்லையே!

மௌலியின் தோல்விக்காக அழுதவள் பிரியா ஒருத்திதான்.

ஏன் அழவேண்டும்? பிற பெண்கள் அழவில்லையே! இன்று அமரேசன் சரியாக ஆடாமல் போனதற்காக அதே பெண்கள் அழவில்லையே! சிறுமிகளே! பிரியாவும்கூட!

தன் தோல்விக்காகவும் வெற்றிக்காகவும் உணர்ச்சிகளால் பாதிக்கப்படும் இதயம் பிரியா ஒருத்திக்குத்தான் உண்டு என்கிற உண்மை அவனுக்குப் புலப்பட்டது.

''பிரியா! தேங்க்யூ!'' என்றுதான் அவனால் சொல்ல முடிந்தது.

# Fleet

## ரீ-ஃபில்

* மழமழப்பாக எழுதுவது
* சுத்தமாக எழுதுவது
* நீடித்து உழைப்பது



வாட்டுமல்
இண்டஸ்ட்ரீஸ்
பிரைவேட் லிமிடெட்
9-9ஏ, எஸ். பாட்கர் மார்க்,
பம்பாய்-400 036

Creative Unit 837-Tam.

ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும்
ஏற்படும்போது வெட்கப்படுங்கள்
அல்லது . . .



## ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்



ஷேவிங் வேண்டாம். அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய கனிவான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம். மென்மையான ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர்- இந்த க்ரீமை வேண்டாத ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் வெண்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது... வாரக்கணக்கில் பட்டுப்போல் மென்மை-தொட்டுப் பார்த்தால் மழமழப்பு... பெண்மையின் கனிவைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு: ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!

## ஆன் பிரெஞ்ச்

ஹேர் ரிமூவர்




அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும்
அருமையான க்ரீம்

2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffrey Manners & Co. Ltd.

III HR 202 Tam

# ரசனை மிகுந்த ரசிகமணி விழா

கண்ணபெருமானுக்கும் ரசிகமணி டி.கே.சி.க்கும் ஒற்றுமை பல உண்டு. இருவரும் பிறந்தது ஸ்ரீஜெயந்தி தினத்தில். இருவரும் பரம ரசிகர்கள். நோயுமை போகம் பூண்டவர்கள். நகைச்சுவைப் பிரியர்கள்.

ரசிகமணி டி. கே. சி. பொதிகை மலைச் சாரலில், திருக்குற்றாலத்தில் அமர்ந்து தமிழ்ப் பெரு மக்களுக்குத் தமிழமுதத்தை வாரி வாரி வழங்கிக் கொண்டிருந்தார், தமது பேச்சாலும் எழுத்தாலும். அந்தப் பொதிகை மலை அடிவாரத்தில் திருக்குற்றாலத்துச் சித்திர சபையில் ரசிகமணியின் நினைவு நாளை அவரது 94வது பிறந்த நாள் ஜெயந்தியாக 22-8-73 அன்று கொண்டாடினார்கள்.

இவ்விழாவுக்கு மதுரை, திருநெல்வேலி, அம்பாசமுத்திரம், கல்லிடைக்குறிச்சி, செங்கோட்டை, சங்கரன்கோவில் என்று பல பகுதிகளிலிருந்தும் ரசிகமணியின் ரசிகர்கள் பக்தி சிரத்தையோடு கூடியிருந்தார்கள்.

திரு பெ. நா. அப்புசுவாமி அய்யரவர்கள் இவ்விழாவுக்குத் தலைமை தாங்கி நடத்திக் கொடுத்தது சாலப் பொருத்தமாகவும் சிறப்பாகவும் இருந்தது. திரு பெ. நா. அ. அவர்களே திருநெல்வேலிக்காரர்தாம். 1931ம் ஆண்டில் சென்னையில் தங்கி, வக்கீல் தொழில் புரிந்து வந்தார். அந்த நாட்களில் ரசிகமணி டி. கே. சி. திருநெல்வேலியிலிருந்து கம்பனின் கவிதை நயத்தைச் சொன்னாலும் கேட்பாரில்லையே என்று ஏங்கிக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் 'சென்னை மாநகரம் பலதரப்பட்ட அறிவாளிகள் கூடுமிடம். ஆகவே, இங்கு வந்து உங்கள் பணியைச் செய்யுங்கள்' என்று பெ. நா. அப்புசுவாமி அய்யரவர்கள் டி.கே.சி.க்கு உற்சாகமூட்டி வரவழைத்தார். சென்னையில் தமது இல்லத்தில் முதன் முதலில் டி. கே. சி. தமிழ்க் கவிதைக் கடையைப் பரப்ப வழிசெய்தார். டி. கே. சி. முதன் முதலில் சொன்ன பாடல் இப்போது ரொம்பப் பிரபலமாகிவிட்ட மோர்* பாட்டுத்தானாம். அது அங்கு குழுமியிருந்த பண்டிதர்களை ஆட்கொண்டது. காலஞ்சென்ற நீதிபதி வி. வி. சீனிவாசய்யங்கார் அவர்களுக்கு டி. கே. சி. கம்பரை விளக்கும் முறை பெரிதும் பிடித்துப் போயிற்று. அதிலிருந்து சுமார் நாலரை ஆண்டுகள் திரு பெ. நா. அப்புஸ்வாமி அய்யர் அவர்கள் இல்லத்தில் வாரந்தோறும் சென்னை மாநகரத்து அறிஞர்களும் புலவர்களும் டி. கே. சி.யின் கம்பராமாயணத்தைக் கேட்கவென்றே கூடுவது வழக்கமாகிவிட்டது. இந்தக் கூட்டங்கள் நடைபெறுகையில்தான் பேராசிரியர் கல்கிக்கு டி. கே. சி.யின் அறிமுகமும் பழக்கமும் ஏற்பட்டது. இந்த ரசமான தகவல்களை திரு பெ. நா. அப்புஸ்வாமி தமது தலைமையுரையில் வெளியிட்டார்.

இந்த விழாவில் பங்கு கொள்ளவென்று சென்னையிலிருந்து கல்கி உதவி ஆசிரியர் திரு எஸ். வி. எஸ். சென்றிருந்தார். அவர் அன்றைய கூட்டத்தில் ரசிகமணியிடம் ராஜாஜி எவ்வளவு அன்பும் அக்கறையும் கொண்டிருந்தார் என்பதை விளக்கினார். சிறுகதை எழுத்தாளர் திரு ராஜ நாராயணன் தமிழ்ப் புலமை இல்லாத பாமரர்களைக்கூட கம்பரின் உன்னதமான கவிதை நயங்களை அனுபவிக்கச் செய்யும் ரஸவாத நிபுணர் டி. கே. சி. என்றார். அதற்குத் தாமே ஓர் உதாரணமாக விளங்குவதாகக் குறிப்பிட்டார். திரு ஜ. கே. சுப்பிரமணியம், திரு ல. சா. சண்முகசுந்தரம் ஆகியோர் மிகச் சுவைபட ரசிகமணியின் தமிழ்ப் பணிகளை வெவ்வேறு கோணங்களிலிருந்து பார்த்து அனுபவித்ததை வெளியிட்டனர்.

திருமுருகனார் நன்றி கூற விழா இனிது முடிந்தது.

டி. கே. சி.யின் பேரன் திரு தீப. நடராஜனும், அவர் சகோதரர்களும் விழாவுக்கு வந்திருந்தவர்களிடம் பேசிப் பழகி வந்த முறை ரசிகமணி பேணி வந்த பண்பாடு இன்னும் நிலைபெற்று நிற்கிறது என்பதை நினைவூட்டுவதாக இருந்தது.

ரசிகமணியின் பிறந்த தின விழா பலவிதங்களில் ரசனைக்குரியதாய் விளங்கியது. 'நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை' என்பது போல் ரசிகர் ஒருவர் இருந்தால் அவர் பொருட்டே கலைகள் பல வளர்ந்து நாட்டின் பெருமை ஓங்கும். ரசிகமணி வகுத்த வழியில் நல்ல கலைத் திறனை — நல்ல கலைத் திறனை மட்டுமே — ரசிக்கும் மனப் பக்குவம் நம்மிடையே வளர்ந்து பரவட்டும். — நமது நிருபர்



---

* பாட்டு பற்றிய விவரம் வேண்டுபவர்கள் கல்கி 26-11-72 இதழ் காண்க.

# மணிப்பயல் சேஷு




ஐந்து வயது சேஷு நன்றாகப் படிக்கிறான். விளையாடுகிறான். கார்பொரேஷன் பாங்க் ஜனதா சேமிப்புத் திட்டத்திலும் சேர்ந்திருக்கிறான்.

கார்பொரேஷன் பாங்கின் ஜனதா சேமிப்புத் திட்டம் சிறுவர் சிறுமியர்களுக்கு ஏற்றதொரு திட்டமாகும். அதைச் சிறுவயதிலேயே பயன்படுத்திக் கொண்டால் அவர்கள் எதிர்காலம் சிறந்து விளங்கும்.

தினமும் குறைந்தது 25 பைசா சேமிப்பு செய்தால் பின்னர் அவர்களுக்கு பெரியதொரு சேமிப்பு நிதி காத்திருக்கும். இந்த சிறு சேமிப்புத் தொகையை உங்கள் வீட்டுக்கு வந்து வாங்கிக்கொள்ள கார்பொரேஷன் பாங்கின் பிரதிநிதி காத்துக் கொண்டிருக்கிறார்.

சேமிப்பது மனித இயல்பு. சேஷுவுக்கு அது ஒரு பழக்கமாகிவிட்டது.

உங்கள் குழந்தைகளின் பேரில் இன்றே ஜனதா டிபாசிட் திட்டத்தின்கீழ் சேமியுங்கள்.



ESTD. 1906

—சிநேக மனப்பான்மையுடன் விளங்கும் வங்கி.

## கார்பொரேஷன் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் : உடுப்பி
நிர்வாக அலுவலகம் : மங்களூர்.

maa/CBL/250

# ஞானக்குயில்

ஜெகசிற்பியன்

## 22. 'ஸான்டாக்கிளாஸ்'

ஆச்சரியத்துடன் அவளுடைய அழகிய கண்களை ஏறிட்டு நோக்கினான் நரசு.

மனோகரியும் அவனைக் குறும்பாகப் பார்த்துவிட்டுச் சொன்னாள்: ''காலம்பற எங்க வீட்டுக்கு ஒரு பெண் வந்திருந்தாள்....''

''ஆமாம்; நான்கூடப் பார்த்தேன்!'' என்று கூறிக் கொண்டே நிமிர்ந்து உட்கார்ந்தான் நரசு. ''யாரோ ஒரு கிழவனோடு வந்த பெண்தானே?... இப்போ இங்கே கொஞ்ச நேரத்துக்கு முன்னால் கூடத்துஅறையிலேஉட்கார்ந்திருந்த..''

''அவள் இல்லே! நான் சொல்கிறது வேறே பெண்.''

உள்ளூற வெட்கப்பட்டுக் கொண்ட நரசு, ''ஓ...'' என்றவாறு தலையைக் குனிந்தான்.

''அந்தப் பெண்ணோட ஊர் - உங்க ஊர்தானாம்; மாயவரத்துக் கொறநாட்டிலே அவளுக்கு வீடாம்.''

திடுக்குற்றுப் போன நரசு அவசரமாக அவளை நிமிர்ந்து பார்த்தான்.

''அங்கே தன் மாமா வீட்டில் இருந்த அவள் ஏதோ மன வருத்தத்திலே யார்கிட்டேயும் சொல்லிக் கொள்ளாமல், ரயிலேறி இங்கே இருக்கிற அம்மாவிடம் வந்தாளாம்...''

''அடடே! அந்தப் பெண்ணா?'' என்று தன்னை மீறிக் கிளர்ந்த துடிப்புடன் கேட்டுவிட்டான் நரசு. ''அவள் பெயர் கண்ணம்மாதானே?''

''உங்களுக்கு அவளைத் தெரியுமா? நான் கேட்டதற்கு உங்களைத் தெரியாதுன்னு அவள் சொன்னாளே!''

சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்ட நரசு, ''எனக்கும் தெரியாதுதான். நேத்திக்கு அசந்தர்ப்பமாய் அவளோட அண்ணனைப் பார்த்தேன். அவன் இந்த விவரங்களைச் சொன்னான்'' என்றான்.

''என்ன சொன்னார்?''

''இதே விவரங்களைத்தான். அவளோட மாமா வீட்டார் கடிதாசு போட்டிருந்தார்களாம். ஆனால் அந்தப் பெண் அங்கிருந்து கிளம்பி ரெண்டு நாட்களாகியும் வீடு வந்து சேரலேன்னு சொன்னான். அவளுக்கு இங்கே தன் தாயார் வீட்டு விலாசம் தெரியாதாம், பாவம்!''

''கரெக்ட்! இதிலே ஓர் ஆச்சரியம் பாருங்க; இன்னிக்குக் காலம்பற இந்த வீட்டுக் காம்பவுண்டுக் கேட்டண்டை அந்தப் பெண் வந்து நின்னுக்கிட்டு இருந்தாள். நான் அவளைக் கூப்பிட்டு விவரம் விசாரிச்சேன். மாயவரத்திலேயிருந்து வந்ததாகச் சொன்னாள். உங்களுக்கு அவளைத் தெரிஞ்சிருக்குமோன்னு நினைச்சு நீங்க வருகிறவரையில் இங்கே நிறுத்தி வைச்சிருந்தேன். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் உங்களைப் பார்க்கிறதுக்காக அவளோட அண்ணா வந்தார். நல்லவேளையாக அப்போ அவள் இந்தக் கூடத்து அறையில் உட்கார்ந்திருந்தாள். எதிர்பாராதவிதமாகத் திடீர்னு தன் அண்ணனைப் பார்த்துவிட்டு, 'ஓ'ன்னு கதறி அழுக



அந்தக் காட்சி... அதை எப்படிச் சொல்றதுன்னே எனக்குத் தெரியலே!''

அளவு கடந்த ஆச்சரியத்தால் பொறி கலங்கிப் போனவன் போல் அப்படியே விறைத்து உட்கார்ந்தான் நரசு. சில விநாடிகளுக்குப் பின், ''கற்பனையிலே நடக்கக் கூடியதெல்லாம் வாழ்க்கையிலே நடந்து விடறதும், வாழ்க்கையில் நடக்க வேண்டியதெல்லாம் கற்பனைகளிலே தேங்கி நின்று விடறதும் இந்தக் காலத்திலே ரொம்பவும் சகஜமாகி வர்றது இல்லையா?'' என்றான் தணிந்த குரலில்.

''அப்புறம்?... அந்தப் பெண் இப்போ இங்கேதான் இருக்கிறாளா?''

''இல்லே. உங்க நண்பர் அவளை உடனே அழைச்சுக்கிட்டுப் போய் விட்டார்.''

''அப்பாடா! ஒரு பெரிய கவலை விட்டது!'' என்று தன்னை மீறிய மகிழ்ச்சித் திணறலுடன் கூறிப் பெருமூச்சு விட்டான் நரசு.

''மணி பன்னிரண்டரை ஆயிடுத்தே! இது உங்களுக்குச் சாப்பிடற நேரம் தானே?''

''ஆமாம்; எனக்கு ரொம்பப் பசிக்கிறது.''

''இனிமேல் நீங்கள் எங்க அறையிலேயே வந்து சாப்பிடலாம்னு அம்மா சொல்றாங்க.''

''ஓ! நானும் இதைத்தான் சொல்லணும்னு இருந்தேன்.''

இவ்வளவு நேரம் இல்லாத உற்சாகக் கலகலப்புடன் அவன் இப்போது பேசுவதைக் கேட்டு உள்ளூற வியப்படைந்தவள்போல் அவனை ஏறிட்டுப் பார்த்த மனோகரி, மென்னகை புரிந்தவாறு அங்கிருந்து அகன்றாள்.

ஷர்ட்டைக் கழற்றி ஹாங்கரில் மாட்டி விட்டுப் பனியன் — பாண்ட்டோடு ஒரு துவாலையால் உடம்பைப் போர்த்திக் கொண்டு அறையை விட்டு வெளியே வந்த நரசு உள் அறையை நோக்கித் தயங்கியபடியே சென்றான்.

பக்கத்து அறையில் கட்டிலின் மேல் சாய்ந்து உட்கார்ந்திருந்த கௌரியம்மாள் ''வாங்க தம்பி!'' என்று வாஞ்சையுடன் அழைத்துக் கொண்டே மெல்ல எழுந்து வந்தாள். நேற்றைக்கு



இப்போது அவள் முகம் கொஞ்சம் தெளிவாகவும் தெம்பாகவும் காணப் பட்டது.

அழகிய விரிப்புடன் கூடிய நீண்ட மேசை, குஷன் பொருத்திய நாற் காலிகள், மற்றும் பல நவீன வசதிக ளுடன் மிக நேர்த்தியாக விளங்கிய அந்த டைனிங் அறையை ஒரு நோட்ட மிட்டுவிட்டுத் திரும்பினன் நரசு. ''எனக்குக் கீழே உட்கார்ந்து சாப்பிட் டால்தான் சாப்பிட்டமாதிரி இருக்கும்'' என்று கௌரியம்மாளைப் பார்த்துக் கூச்சப் புன்னகையுடன் கூறினன்.

''அப்படியே சாப்பிடலாம், தம்பி! நீங்க இந்த மாதிரி எதையும் மனம் திறந்து சொல்கிறது எனக்கு ரொம்ப வும் பிடிக்குது!'' என்று முக மலர்ச்சி யுடன் சொன்ன கௌரியம்மாள் சமை யலறைப் பக்கம் திரும்பினள். ''சுகந்தி! அங்கே பந்திப் பாய் இருக்கும்; ரங்குப் பாட்டியை எடுத்துக் கொடுக்கச் சொல்லி வாங்கி வாம்மா!'' என்றாள் சன்னமான குரலில்.

சற்றைக்கெல்லாம் ஓர் அழகிய பத்த மடைப் பந்திப் பாயை எடுத்துக் கொண்டு வந்தாள் புஷ்ப சுகந்தி. அவளிடமிருந்து பாயை வாங்கித் தானே சுவரோரம் விரித்துப் போட் டாள் கௌரியம்மாள். நரசு அந்தப் பெண்ணைப் பட்டும் படாமலும் பார்த் துக்கொண்டே பாயில் அமர்ந்தான்.

''சுகந்தி! இது எங்களுக்கு ரொம்ப வும் வேண்டியவங்க வீட்டுப் பிள்ளை. பேர் நரசிம்மன். மாயவரத்திலிருந்து இங்கே உத்தியோகம் தேடி வந்திருக் குது. நமஸ்காரம் பண்ணிக்கோம்மா!'' என்று அவனை அந்தப் பெண்ணுக்கு அறிமுகப்படுத்தும் வகையில் இளநகை யுடன் சொன்னாள் கௌரியம்மாள்.

''தோத்திரம்!'' என்றவாறு தன் இரு கரங்களையும் அழகாகக் குவித்து வணங்கினள் சுகந்தி. அவளது முகத் தில் புன்சிரிப்போ, வெட்கக் குழைவோ



எதுவும் தென்படவில்லை. சற்று மிரட்சி யடைந்த சாயையே காணப்பட்டது.

அவள் வணக்கம் தெரிவித்தபோது பதிலுக்கு என்ன சொல்வது, என்ன செய்வது என்று தோன்றாமல் சங்கடப் பட்டுப் போனான் நரசு. ஓர் அசட்டுப் புன்முறுவல் மட்டுமே அவனால் பூக்க முடிந்தது. உள்ளூறக் கொஞ்சம் வேடிக் கையாகவும் இருந்தது. அவளுடைய நடை, உடை, பாவனைகள், நிற்கும் தோரணை, பேசும் விதம் எல்லாமே அவ னுக்கு மிக விசித்திரமாகப் பட்டன. இவையெல்லாவற்றையும்விட அவளை—முதல் முறையாக அவன் முகத்தை—அந்த ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்த போது அவனுள் இனம் புரியாததோர் அநுதாப உணர்ச்சி குபீரெனப் பொங்கி நெஞ்சை அடைப்பது போலாகியது. அதனால் சட்டென்று பார்வையைத் தாழ்த்திக் கொண்டான் அவன்.

''சரி; நீ போகலாம்'' என்று கூறிய வாறு நரசுவின் எதிரே உட்கார்ந்து கொண்டாள் கௌரியம்மாள்.

அவள் இப்படிச் சொல்லும் வரையில் அங்கேயே பதுமை போல் நின்றிருந்த சுகந்தி பக்கத்து அறையை நோக்கிச் சென்றாள்.

ரங்குப் பாட்டி வந்து நரசுவுக்கு இலை போட்டுச் சாதம் பரிமாறினாள். கௌரியம்மாளும் தன் கையால் கறி வகைகளை எடுத்து வைத்தாள்.

''அம்மா! அவர் வீட்டிலே இருக் கும்போது குழந்தைபோல் இருந்து பழக்கப்பட்டவராம். காலையிலே இப் படி என்கிட்டச் சொன்னார். அதனால் சாப்பிட எதனுச்சும் அடம் பிடிச்சால் அதட்டி மிரட்டிச் சாப்பிட வையுங் கம்மா!'' என்று பக்கத்து அறையில் இருந்தபடி சொன்னாள் மனோகரி.

இதைக் கேட்டுக் கௌரியம்மாள் சிரிக்க, நரசுவும் மெல்லச் சிரித்துக் கொண்டான். ஆனால் அவனுடைய மனமோ, 'இந்தச் சுகந்தி என்ற பெண் யாரா யிருப்பாள்?' என்ற கேள்வி யையே தனக்குள் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தது. கௌரியம் மாளிடம் கேட்டு விடலாமா என்று வாய் எடுத்தான். இந்தச் சமயம் அவ னுக்குப் புரையேறிவிட்டது. உச்சந் தலையைத் தட்டி விட்டுக் கொண்டான்.

''உங்க அம்மா நினைக்கிறாங்க போலிருக்கு தம்பி!'' என்று சொல்லிப் புன்னகை பூத்தாள் கௌரியம்மாள்.

''என் அம்மா மட்டுமில்லேம்மா! எங்க வீட்டிலே இருக்கிற பாக்கியத்தம் மாளும் நினைச்சிருப்பாங்க!'' என்று சிரித்துக் கொண்டே கூறி அவள் முகத் தைப் பார்த்தான் நரசு.

கௌரியம்மாள் இதற்குப் பதில் ஏதும் சொல்லாமல் மௌனமாயிருந் தாள். அவளுக்கு மிகவும் தெரிந்த வளான பாக்கியத்தம்மாளைப் பற்றித் தன்னிடம் இதுவரையில் எதுவுமே கேட் காமலிருப்பதோடு தானே இப்போது அவளது பெயரை நினைவுபடுத்தியும் அதைக் காதில் வாங்கிக்கொள்ளாதவள்

போல் இருப்பதைக் கண்டு உள்ளூற ஆச்சரியப்பட்டுக் கொண்டான் நரக.

''அவர் மத்தியானச் சாப்பாட்டுக்கு வரமாட்டார்னு நினைக்கிறேன். வேலை நிறுத்தமாகிக் கிடக்கிற அந்தக் கம்பெனியின் டைரக்டர்கள் கூட்டம் இன்னிக்கு நடக்குதாம். அதிலே கலந்து கொள்கிறதுக்காகப் போயிருக்கிறார் இவர்'' என்று சற்றுக் கவலையுடன் சொன்னாள் கௌரியம்மாள்.

'அப்படியா?' என்பதுபோல் தலையாட்டிக் கொண்ட நரகவின் சிந்தனை இப்போது வேறு திசையில் திரும்பி விட்டது. வேலைநிறுத்தம் செய்திருக்கும் அந்தக் சூளாய் உற்பத்திக் கம்பெனி மீண்டும் திறக்கப்பட்டால் அதிலே திருமலைக்கு எப்படியும் ஒரு வேலை வாங்கிக் கொடுத்துவிட வேண்டும் என்ற தனது தீர்மானம் பற்றி... தன்னால் பல துன்பத் துயரங்களுக்கு உள்ளான அந்தப் பெண் கண்ணம்மா அதிர்ஷ்டவசமாய்த் தன் சகோதரனைச் சந்தித்து நல்லபடியாய் இன்று வீடு போய்ச் சேர்ந்திருப்பது பற்றி.... அவ்வீட்டின் மாடியறையில் குடியிருக்கும் அந்த வங்காளிப் பெரியவரைப்பற்றி....

அவன் சீக்கிரமே சாப்பிட்டு எழுந்து விட்டான். அவனுக்குத் தான் அருகிலிருந்து உணவு பரிமாறிச் சாப்பிட வைத்த திருப்தியுடன் கௌரியம்மாளும் எழுந்து போனாள். கையையும் வாயையும் துவாலையால் துடைத்தவாறு தன் அறைக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான் நரக.

''இங்கே இப்படிக் கொஞ்சம் விஜயம் செய்துவிட்டுப் போகலாமே!''

அவன் சட்டென்று நின்று பக்கவாட்டில் திரும்பினான். கூடத்து அறைக்குப் பக்கத்தில் இருந்த ஓர் அறை வாசலின் அழகிய திரையை விலக்கிப் பிடித்தவாறு புன்முறுவலுடன் நின்றிருந்தாள் மனோகரி.

''வாங்க, உள்ளே வாங்க!''

அவன் தயங்கித் தயங்கி அவ்வறையினுள் பிரவேசித்தான். அது மனோகரியின் தனியறை என்பதை அவனால் உடனே புரிந்து கொள்ள முடிந்தது. ஓர் ஒற்றைக் கட்டில், புத்தக அலமாரி, மேசை நாற்காலி, ரேடியோ, தையல் இயந்திரம், துணிமணிகளுக்கெனத் தனியாக ஒரு பீரோ — இவற்றிலெல்லாம் அவனுடைய கவனம் செல்லவில்லை. சுவரில் மாட்டியிருந்த போட்டோ படம் ஒன்றின் மீதே முதலில் பார்வை சென்று பதிந்தது.

அந்தப் படத்தில் மனோகரி பட்டதாரி உடை அணிந்து கம்பீரமாக நின்றிருந்தாள். அவளுக்கு இருபுறங்களில்



அம்பத்தூரில் இருக்கும் அரசுத் துறையைச் சேர்ந்த 'விக் இந்தியா' நிறுவனம் இதுவரை ஒன்றரைக் கோடி ரூபாய் நஷ்டம் சம்பாதித்திருக்கிறது. இப்பொழுது வேலை எதுவும் இல்லாததால் அங்குள்ள 600 தொழிலாளர்கள் சம்பளம் மட்டும் வாங்கிக்கொண்டிருக்கிறார்கள்.

ஹிந்துஸ்தான் டைம்ஸ் - பாலி

வேதமூர்த்தியும் கௌரியம்மாளும் வீற்றிருந்தனர். படத்தின் கீழே அவள் பி.ஏ. பட்டம் பெற்ற தேதி, மாதம், வருடமும், பிற விவரங்களும் 'டைப்' செய்து ஒட்டப்பட்டிருந்தன. இந்த வருடம்தான் பட்டப் படிப்பை அவள் முடித்திருக்கிறாள்.

மேலே சென்றிருந்த தன் பார்வையை அப்படியே கீழே தாழ்த்தினான் நரக.

அங்கே, அவ்வறையின் நடுவில் தரையிலே ஒருக்களித்து உட்கார்ந்தபடி அம்பர் ராட்டையில் நூல் நூற்றுக் கொண்டிருந்தாள் சுகந்தி. அவளுக்கு நூற்பதில் கொஞ்சமும் பயிற்சியில்லை என்பது அவள் பஞ்சையும் ராட்டைச் சக்கரத்தையும் பிடித்துச் சுழற்றுவதிலிருந்தே தெரிந்தது. ஆனாலும் அந்தக் காரியத்தில் தன் முழுக் கவனத்தையும் செலுத்தியிருந்ததால் நரகவை அவள் நிமிர்ந்துகூடப் பார்க்கவில்லை. மனோகரி அவளுக்கு நூற்புப் பயிற்சி அளிக்கிறாள் போலும்!

''இதோ பாருங்க, இதைக் காட்டுறதுக்குத்தான் உங்களைக் கூப்பிட்டேன்'' என்று இனிய குரலில் கூறிக் கொண்டே சுவரில் தொங்கிய ஒரு பட்டுத் திரையை மெல்ல விலக்கினாள் மனோகரி. மூன்று அடிக்கு நாலடி நீளச் சதுரத்தில் அமைந்த சுவர் அலமாரி அது. கண்ணாடிக் கதவு போடப்பட்டிருந்தது. உள்ளே மூன்று அடுக்குகள். அவற்றில் கிராமக் கைவினைக் கலைஞர்களால் மிகத் திறம்படச் செய்யப் பெற்ற அழகழகான பொம்மைகளும் விளையாட்டுச் சாமான்களும் பாங்குடன் வைக்கப் பெற்றிருந்தன. எல்லாம், எளிய பொருட்களால் ஆனவைதாம். ஆனால் ஒவ்வொன்றும் மிக நுணுக்கமான வேலைப்பாட்டுடன் கண்ணையும்

கருத்தையும் ஒருங்கே கவர்வனவாய் விளங்கின. அத்துடன் அவை அனைத்துமே பழையனவாகவும் தோன்றின.

''பார்த்தீங்களா? இவைகளைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க?'' என்று ஒரு குறுநகை புரிந்து கேட்டாள் மனோகரி.

''ஒண்ணும் நினைக்கலே; ஆனால் ரொம்பவும் ரசிக்கிறேன்.''

''ரசித்த அப்புறம் ஏதாவது நினைக்கத் தோணும் இல்லையா? அதைச் சொல்லுங்க!''

அவன் அவளைப் புன்னகையுடன் பார்த்துவிட்டு, ''அப்படீன்னா நான் நினைக்கிறதைச் சொல்றேன்; கோபிச்சுக்கப்படாது!'' என்றான்.

''சொல்லுங்க. நான் அதைத்தான் கேட்கிறேன்.''

''பணக்கார வீட்டுச் செல்லப் பெண்கள் ஒரு போலி கௌரவத்துக்காகச் செய்யற காரியம் இது. இம் மாதிரி பைசாப் பெறாத பொருட்களையெல்லாம் வாங்கி வந்து அதுகளைப் பிரமாதமான பின்னணிகளோடு வைச்சுத் தங்களைப் பெரிய கலா ரசிகைகள்னு காட்டிக் கொள்கிறது இப்போ ஒரு ஃபாஷனாப் போச்சு. இந்த விஷயமா நான் இன்னும் நிறையச் சொல்லுவேன்; இதுக்கெல்லாம் அடிப்படைக் காரணங்கள் என்னன்னும் சொல்லுவேன். ஆனால்...''

''இவ்வளவுதான் நினைத்தீங்களா?'' என்று கலீரெனச் சிரித்துக் கேட்டாள் மனோகரி.

''இப்படித்தான், இந்தக் கோணத்தில் தான் நினைச்சேன்.''

''வேறே ஒண்ணும் நினைக்கத் தோணலியா?... அதாவது, வேறே எதுவும் நினைவுக்கு வரலியா?''

நரசு சற்று நிதானித்து விட்டு, ''இல்லையே!'' என்று இழுத்தான்.

''இந்தப் பொம்மைகள், விளையாட்டுச் சாமான்கள் எல்லாம் எனக்கு அன்பளிப்பாகக் கிடைத்தன.''

''இருக்கலாம். இதிலே அதிசயப்பட ஒண்ணுமில்லே.''

''இருக்குது! இதெல்லாம் நான் சின்னக் குழந்தையாக இருந்தபோது - இந்த விளையாட்டுப் பொம்மைகளை வைச்சு விளையாடத் தெரியாத பருவத்திலேயே — எனக்கு வாங்கிக் கொடுத்தவை.''

''இதிலும் ஆச்சரியப்பட ஒண்ணுமில்லே; குழந்தை பிறந்த உடனேயே ஸ்கூட்டரும் சைக்கிளும் வாங்கிக்கொடுக்கிற பெற்றோர்களும் இருக்கிறாங்க!''

''இருக்கலாம். ஆனால் இதுகளை என் அம்மா, அப்பா வாங்கிக் கொடுக்கலே; எங்க உறவுக்காரங்களும் கொடுத்ததில்லே.''

''கிறிஸ்துமஸ் இரவிலே ஸான்டாக்ளாஸ் கொண்டு வந்து வைச்சுட்டுப் போனாரோ என்னவோ!'' என்று இந்த நேரம் ராட்டையுடன் 'ரகளை' நடத்திக் கொண்டிருந்த சுகந்தி மெல்லிய குரலில் சொன்னாள். இதை அவள் சிரித்துக் கொண்டோ, குறும்பாகவோ சொல்லவில்லை; நிஜமாகவே அப்படி நடக்கும் என்ற நம்பிக்கையில் திளைத்திருப்பவள் போன்று ரொம்பவும் இயல்பாகச் சொன்னாள்.

நரசுவும் மனோகரியும் இதைக் கேட்டுக் கலகலவென்று சிரித்து விட்டனர்.

''சுகந்தி சொல்றதும் ஒரு வகையில் சரிதான். அந்த ஸான்டாக்ளாஸ் கிழவரின் மனோபாவம் கொண்ட ஒருவர் எனக்கு அன்போடு அளித்த பரிசுப் பொருட்கள்தாம் இவை'' என்றாள் மனோகரி குரலில் ஒருவிதக் கரகரப்பு இழைய.

''இன்னும் எவ்வளவு நேரம்தான் இப்படிப் புதிர் போட்டுக் கொண்டிருப்பதாக உத்தேசம்?'' என்றான் நரசு மென்மையான கேலிக் குரலில்.

''இது பற்றி இன்னும் கொஞ்சம் நீங்க யோசனை பண்ணிப் பார்க்க முடியாதா?''

''ஆருடம்தான் பார்க்கலாம். எனக்கு அதில் பயிற்சி இல்லே.''

''சரி; இதற்கு மேலும் உங்களைச் சோதனைப்படுத்திச் சலிப்படைய வைக்கக் கூடாது!'' என்று சிரித்துக் கொண்டே சொன்ன மனோகரி சட்டென்று சிரிப்பை அடக்கிவிட்டு முகத்தில் ஒருவிதச் சோகம் படரப் பார்வையை வேறு பக்கம் திருப்பிக்கொண்டாள். ''இந்தப் பொம்மைகளையும் விளையாட்டுச் சாமான்களையும் எனக்கு வாங்கிக் கொடுத்தவர் உங்க அப்பா தான்! அவர் அப்போ கதரும், கிராமக் கைத்தொழில் பொருள்களும் விற்கிற கடை ஒன்று வைத்து நடத்திக்கிட்டு இருந்தாராம். அது சம்பந்தமாக மெட்ராசுக்கு மாசம் இரண்டு மூணு தடவை வந்து எங்க வீட்டிலே தான் தங்கி யிருந்து விட்டுப் போவாராம். அப்படி வரும்போதெல்லாம் இப்படி ஏதாவது ஒரு பொம்மையையோ விளையாட்டுச் சாமானையோ வாங்கி வந்து என் கையிலே கொடுப்பாராம். அவர் கடைசியாக வாங்கிக் கொடுத்த பொம்மை, இதோ இருக்குதே இதுதானும்'' என்றவாறு சந்தன மரத்தில் செதுக்கி உருவாக்கிய ஓர் அழகிய சிறிய புத்தர் பொம்மையைச் சுட்டிக் காட்டினாள். **(தொடரும்)**

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam




ஹரிஹரன் பேசாமல் இருந்தான்.

கல்யாணசுந்தரம் தம்பதிக்கு நான்கு பிள்ளைகளும் ஒரு பெண்ணும். பெண் முதலிலேயே பிறந்துவிட்டதால் அவளுக்கு வெகு நாட்களுக்கு முன்பே கல்யாணம் முடிந்துவிட்டது. அப்புறம் நான்கும் ஆண் மக்கள். அவர்களில் மூத்தவன் ஹரிஹரன். அவனுக்குப் பிறகு இரண்டு வயது வித்தியாசங்களில் மற்றவர்கள். ஹரிஹரனுக்கு இருபத்தைந்து வயது முதல் வரன்கள் வந்து கொண்டுதான் இருந்தன. கல்யாணசுந்தரமும் — அலமேலுவும் வாய்ப் பேச்சுக்களிலேயே வருகிற வரன்களையெல்லாம் விரட்டிக் கொண்டிருந்தார்கள். அப்படியே ஐந்து வருடங்கள் சென்று விட்டன. ஹரிஹரனுக்கு முப்பது முடிந்தது. அதன் பிறகு இந்த மூன்று வருடங்களாக அவ்வளவாக ஜாதகங்கள் வரத்துப் போக்கில்லை. அபூர்வமாக வருடத்துக்கு இரண்டொன்று வருவதும் போவதுமாக இருந்தது. அதில் இதுவும் ஒன்று.

இதுவரைக்கும் தட்டிப் போன வரன்கள் எல்லாமே லௌகீக விஷயத்தினால்தான்..... ஹரிஹரனுக்கு 'நமக்கு இனிமேல் கல்யாணமே ஆகாதோ?' என்கிற அவநம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. ஆனால் அதற்காக அவன் பெற்றோர்களுக்குத் தெரியாமல் ஏதேனும் ஒரு பெண்ணை மணந்து கொண்டு வந்துவிடவில்லை. அந்த விஷயத்தில் மட்டும் இந்தக் காலத்திலுள்ள எல்லா இளைஞர்களையும் போல் மிக உத்தமமான சத்புத்திரனாகவே அவனும் இருந்து வந்தான். இருந்தாலும் உள்ளூற ஒருவித ஏக்கம் இருந்து வரத்தான் செய்தது. அதன் விளைவாக உடம்பும் தேய்ந்து கொண்டேதான் வந்தது.

பட்டணத்துக்காரரான வேதகிரியிடமிருந்து உடனே பதில் வந்துவிட்டது. மூவாயிரம் ரூபாய் வரதட்சிணை தருவதற்குச் சம்மதம் தெரிவித்துக் கடிதம் எழுதியிருந்தார். ஹரிஹரன் நிம்மதியாகப் பெருமூச்சுவிட்டான்.

"ஆயிரம் ரூபாய்க்கு மேல் கொடுக்க முடியாது என்று எழுதியிருந்தவர் இப்போது மூவாயிரத்துக்குச் சம்மதித்திருக்கிறார் பார்த்தேளா? நம்ப அவசரப்பட்டுட்டோமோ...?" என்று ஆதங்கப்பட்டாள் அலமேலு.

"என்னவோ போகட்டும், விடு.... இரண்டாயிரம் ரூபாய் நஷ்டம்" என்று கூறி மனைவியைச் சமாதானம் செய்தார் கல்யாணசுந்தரம்.

"பொண்ணைப் பெத்தவா எப்பவும்தான் மூக்கால் அழுவா. அதையெல்லாம் நாம்ப நம்பியிருக்கக் கூடாது..... போலேயிருக்கு" என்று ஏக்கப் பெருமூச்சு விட்டாள் அலமேலு.

முகூர்த்தத்துக்குக் தேதியும் குறிப்பிட்டாயிற்று.

தாங்களே ஒர் இரண்டாயிரம் ரூபாய் என் பெயருக்கு அனுப்பி உதவுங்கள். தாங்கள் இனாமாகத் தர வேண்டியதில்லை. கல்யாணம் முடிந்ததும் கொஞ்சம் கொஞ்சமாகத் தங்களுக்கு அந்த ரூபாய்களை என் சம்பளப் பணத்திலிருந்து வட்டியோடு வேண்டுமானாலும் கொடுத்து விடுகிறேன். தங்களுடைய அன்பான பதிலையும், டிராப்டையும் மறு தபாலில் எதிர்பார்க்கிறேன்.

இப்படிக்கு,
வசந்தி.''

கடிதத்தைப் படித்து முடித்ததும் திரைப்பட வில்லன்களைப் போல் கடகடவென்று பெரிதாகச் சிரிக்க வேண்டும் போலிருந்தது ஹரிஹரனுக்கு. அலுவலகத்தில் இருக்கிறோம் என்ற உணர்வே அவனை அப்படிச் சிரிக்க விடாமல் தடுத்து நிறுத்தியது.

'மூவாயிரம் ரூபாய்! பிச்சைக் காசு! அதிலும் குறைக்கவேண்டுமாமே? என்ன பேராசை இவளுக்கு! கொடுக்க வழி இல்லாவிட்டால் இரண்டாந்தாரம் மூன்றாம் தாரமாகப் பார்ப்பதுதானே? மூவாயிரம்தான் வரதட்சிணை என்று சொன்னதற்கே ராமு — சுரேஷ்—சேது எல்லோரும் 'பூ! இது ஒரு தொகையா? இதற்குச் சும்மாவே பண்ணிக் கொள்ளலாமே!' என்று கேலி செய்கிறார்கள். அவர்கள் எல்லோரும் ஆறு ஏழு என்று வாங்கிக் கொண்டவர்கள். மூவாயிரமில்லை, ஆயிரம் தான் என்றால் எல்லோரும் காரித் துப்ப மாட்டார்களா! சே! சே! வசந்தியின் வார்த்தை ஜாலத்துக்கு நாம் மயங்கி விடக் கூடாது' என்று முடிவு செய்தான் ஹரிஹரன். உடனே பதிலும் எழுதினான்.

வசந்திக்கு!

உன் கடிதம் கிடைத்தது. திருமணம் ஆவதற்கு முன்பு நீ எனக்குக் கடிதம் எழுதியதை நான் தவறாகக் கருதவில்லை. ஆனால் அதில் உள்ள விஷயம்....?

ஐயாயிரம் ரூபாய்களை மூவாயிரம் ரூபாயாகக் குறைத்ததே என்னுடைய பகீரதப் பிரயத்தனத்தினால்தான். இதற்கு மேல் நான் அது விஷயமாக எதுவும் செய்வதற்கில்லை. என் அக்காவுக்கு நாலாயிரம் கொடுத்தோம். என் நண்பர்கள் எல்லாம் ஆறும் ஏழும் வாங்கியிருக்கிறார்கள். நான் ரொம்ப ரொம்பக் குறைவுதான்.

இரண்டாவது விஷயம்: இரண்டாயிரம் ரூபாய் கடன் கேட்டிருக்கிறாய். கேட்டதில் தவறில்லை. அதைத் திருப்பித் தருவதற்கு நீ எழுதியிருக்கும் வழி எப்படிப் பார்த்தாலும் சரியாக இல்லை. கல்யாணம் முடிந்து விட்ட பிறகு உன்னுடையது என்று உள்ளது அனைத்தும் என்னுடையது ஆகிவிடுகிறது. அதன்பிறகு நீ எப்படி என் பணத்தைத் திருப்பிக் கொடுக்க முடியும்? நாமம்தான்! 'மறைமுகமான வரி' என்பதுபோல் இதுவும் ஒரு தந்திரம்தான். ஆகவே நான் பணம் அனுப்புவதற்கில்லை.

அன்புடன்,
ஹரிஹரன்

கடிதத்தைத் தபாலில் சேர்த்துவிட்டு வந்தான் ஹரிஹரன். அதுவரையில் அவனுக்கு இருந்த தைரியமும் வீறாப்பும் உடனே மறைந்து போயிற்று. கல்யாணம் நின்று போய்விடுமோ என்கிற பயம் உண்டாகி விட்டது. 'சம்பாதிக்கிற மனைவி வந்து விட்டால் தாராளமாக இருக்கலாமே' என்று அவன் எத்தனை எத்தனை மனக் கோட்டைகள் கட்டி வைத்திருக்கிறான்! கல்யாணமே நின்று போய்விட்டால்? மறுபடியும் வருகிற வரன் வேலைக்குப் போகிறவளாக வருவாள் என்பது என்ன நிச்சயம்? இந்த மன நடுக்கத்துடனேயே ஒரு வாரம் கடந்தது.

கல்யாணம் நிற்கவில்லை. காரியங்கள் யாவும் தங்கு தடையில்லாமல் நடந்து கொண்டுதானிருந்தன.

ஹரிஹரன் - வசந்தி திருமணம் நடந்த தேதி ஒரு மாதம் பறந்து சென்று விட்டது. இருவரும் தேனிலவை முடித்துக் கொண்டு நேற்றுத்தான் திரும்பி யிருந்தார்கள். இன்று ஹரிஹரன் ஆபீசுக்குப் போயாக வேண்டும். ஒரு மாத விடுமுறை ஓடியே போய்விட்டது வசந்திக்கு.

''வசு! நீ எத்தனை நாட்கள் லீவு போட்டிருக்கிறாய்?'' என்று கேட்டான் மனைவியிடம்.

''லீவு போடுவதா? இனிமேல் எனக்கு எப்போதுமே லீவுதான்'' என்று சிரிக்காமல் சொன்னாள் வசந்தி.

''அப்படி யென்றால்... எனக்கு ஒன்றுமே புரியவில்லையே...!'' உண்மையிலேயே அவன் புரியாமல்தான் விழித்தான்.

''நான் வேலையை ராஜிநாமாச் செய்து விட்டேன்.''

''மூந்நூற்றிருபது ரூபாய் வந்துகொண்டிருந்த வேலையை யாராவது ராஜிநாமா செய்வார்களா? யாரைக் கேட்டுக்கொண்டு செய்தாய்?'' ஆத்திரம் தாங்கமுடியவில்லை அவனுக்கு.

''யாரைக் கேட்க வேண்டுமோ அவர்களைக் கேட்டுக் கொண்டுதான் செய்தேன். அதாவது என் அப்பாவை. கல்யாணச் செலவுக்குப் பணம் வேண்டியிருந்தது. அப்பா எங்கெங்கெல்லாமோ கேட்டுப் பார்த்துவிட்டார். கிடைக்கவில்லை. நானும் ஒருவருக்கு எழுதிக் கேட்டேன். கிடைக்கவில்லை. கல்யாணமோ நடந்துதான் ஆக வேண்டும் என்று பிடிவாதமாக இருந்தார்கள், அம்மாவும் அப்பாவும். நான் வெகுவாக யோசித்தேன். பிறகு ஓர் முடிவுக்கு வந்தேன்.

''எனக்குக் கல்யாணம் நடந்துவிட்டால் காப்பாற்றியே ஆகவேண்டிய கடமை என் கணவருடையதாகி விடுகிறது. அதன் பிறகு நான் வேலை பார்க்க வேண்டிய அவசியமில்லை அல்லவா? அதனால் வேலையை ராஜிநாமாச் செய்து விட்டேன். அதனால் என் ஆபீஸிலிருந்து எனக்குப் பிடிப்புப் பணம் ஐயாயிரம் ரூபாய்க்கு மேல் வந்தது. அப்பாவிடம் கொடுத்தேன். அவர் அதிகமாகக் கடன் வாங்காமல் இருக்க அந்தப் பணம் அவருக்கு உதவியது. அதில் எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா?'' வசந்தி பேசிக் கொண்டிருந்தாள். ஹரிஹரன் வாயடைத்துப் போய்ச் சிலையாக நின்று கொண்டிருந்தான்.

அட்டைப்பட விளக்கம்

## விக்கினேசுவரர் என்றால்...?



சுந்தரேசுவரர் என்றால் சுந்தரமாக இருக்கும் ஈசுவரன்; ஞானேசுவரர் என்றால் ஞானத்தைத் தருகிற ஈசுவரன்; இப்படிப் பார்த்தால் விக்கினேசுவரர் என்றாலும் விக்கினத்தின் வடிவமாக உள்ள அல்லது விக்கினத்தைத் தருகிற ஈசுவரன் என்றுதானே ஆகும்? உண்மைதான்! அடியார்களின் விக்கினங்களை விலக்கிக் காக்கும் மகா கணபதி, கொடியார்களுக்கு விக்கினங்களை உண்டுபண்ணவும் செய்வார். மற்றக் கடவுளர் பாத்திரம் பாராமல் அநுக்கிரகம் செய்துவிட்டாலும், அதனால் உலகுக்குத் தீமை வந்து விடக் கூடாதே என்பதால் கணநாயகன், இந்தத் தகாத பாத்திரத்துக்கு விக்கினத்தை உண்டுபண்ணிப் பழைய அநுக்கிரகத்தை அர்த்தமற்றுப்போகச் செய்வதில் சதுரர். ராட்சத ராவணன் கதையை எடுத்துக் கொள்ளுங்களேன்! அவன் கைலையங்கிரியில் கோரத் தவமியற்றியவுடன் சிவபெருமான் கருணைகூர்ந்து, அவனது தகுதியையும் பாராது, அவன் விரும்பியபடி தமது லிங்கத் திருமேனியை அவனுக்கு வழங்கிவிட்டார். இந்த லிங்கத்தை மட்டும் ராவணன் லங்கையில் பிரதிஷ்டை செய்திருந்தால் அப்புறம் அவனது அரக்க ஆட்சியை எவராலும் தடுத்திருக்கவே முடியாது. பார்த்தார் பிள்ளையாரப்பர். விக்கினம் உண்டாக்கும் விக்கினேசுவரர் ஆனார். பிரம்மசாரி உருவில் [illegible] வந்தார். சந்தியோபாசனை செய்ய வேண்டிய சமயம். லிங்கத்தைத் தம்மிடம் தந்து, ராவணன் அவ்வழிபாட்டை முடித்து வரலாம் என்றார். 'இந்த லிங்கத்தைப் பூமியில் எங்கே வைத்தாலும் அங்கேயே அது நிலைத்து மூலைத்துவிடும். அதனால் நான் திரும்பி வருமளவு இதைக் கையிலேயே வைத்துக்கொள்ள வேண்டும்' என்றான் ராவணேசுவரன். 'சரி, எனக்குக் கை கனத்துவிட்டால் உன்னை மும்முறை அழைப்பேன். அதற்குள் நீ வந்து அதை வாங்கிக் கொள்ள வேண்டும். தவறினால் கீழே வைத்து விடுவேன்' என்று நிபந்தனை போட்டார் விகட நாயகர். ராவணன் அதற்கு இணங்கி சந்தி செய்யத் தொடங்கினானோ இல்லையோ விநாயகர், 'ராவணா, ராவணா, ராவணா' என்று மும்முறை ஒரே மூச்சில் அழைத்து விட்டு, ராபணா என்று லிங்கத்தைப் பூமியில் வைத்து விட்டார். அப்புறம் ராவணன் வந்து பிரம்மசாரியை அடிக்கப் போனதாகவும் அவர் மாயமாக மறைந்ததாகவும் வரலாறு. இவ்வாறு லிங்கம் பிரதிஷ்டையான இடமே கோகர்ணம் என்பார்கள்.

தகாதவனிடம் உகாத வஸ்துக்கள் சேர்ந்து உலகுக்கு உற்பாதம் விளைவிக்காதபடி விக்கினம் விளைக்கும் விரைகழல் பணிந்து சதுர்த்தி விழாக் கொண்டாடுவோம்.




**எ**ல்லோருடைய வாழ்க்கையிலும் எல்லாக் கால கட்டங்களிலும் இடம் பெறும் கேள்வி ஒன்று இருக்கிறது. 'வருமா, வராதா?' என்பதே அது. உதாரணமாக ஒரு திரைப்படத் தயாரிப்பாளர், ஒரு தொழிலதிபர், ஓர் அரசியல்வாதி, ஒரு குடும்பஸ்தர், ஓர் எழுத்தாளர் ஆகியோரை எப்படியெல்லாம் இந்தக் கேள்வி வாட்டி வதைக்கிறது என்பதை இங்கே பார்க்கலாமே!

## திரைப்படத் தயாரிப்பாளர் :

**ந**ம்முடைய படத்தின் கதை இந்தக் காலத்துக்கு ஒத்து வருமா, வராதா?

நமக்காகப் பாடலாசிரியர் போடவிருக்கும் பாடல்களில் இரட்டை அர்த்தம் வருமா, வராதா?

இசையமைப்பாளர் போடும் ட்யூன் எல்லோர் வாயிலும் புகுந்து வருமா, வராதா?

ஃபைனான்ஷியர்கள் வாக்களித்திருக்கிறபடி அவர்களிடமிருந்து நமக்குத் தேவைப்படுகிற சமயத்தில் பணம் வருமா, வராதா?

செட்டுகளுக்காக ஆர்ட் டைரக்டர் எக்கச்சக்கமாகப் பணத்தை அள்ளிவிட்டிருக்கிறாரே, இது நமக்குக் கட்டி வருமா, வராதா?

படப் பிடிப்பில் தலைகீழாக நின்றும் குட்டிக் கரணம் போட்டும் புதுப் புதுக் கோணங்களில் காமிராமேன் படம் பிடித்திருக்கிறாரே, அந்தக் காட்சிகளெல்லாம் படத்தில் சரியாக வருமா, வராதா?

கதாநாயகனுக்கும் நாயகிக்கும் இடையே ஏதோ 'சமரசம்' என்கிறார்களே, அவர்களுக்குள் ஒத்து வருமா, வராதா?

கதாநாயகனுக்கு செட்டில் நுழைந்து மூன்று மணி நேரத்துக்குப் பிறகாவது 'மூட்' வருமா, வராதா?

வெளிப்புறக் காட்சிகளுக்கென்று ஏகப்பட்ட பணத்தைச் செலவழித்துக் கொண்டு காஷ்மீருக்கு வந்திருக்கிறோமே, இன்றைக்காவது சூரியன் வருமா, வராதா?

'காபரே' பாணியில் துகிலுரியும் காட்சி ஒன்றைப் படமாக்கியிருக்கிறோமே, அது சென்ஸார் கத்திரிக் கோலுக்குத் தப்பி, வருமா, வராதா?

'ரிலீஸ்' தேதி நெருங்கியும் படத்தை முடிக்காமலிருக்கிறாரே டைரக்டர், குறித்த தேதியில் படம் வருமா, வராதா?

ஒரே 'ஏரியா'வை இரண்டு பேர் தலையில் சாமர்த்தியமாகக் கட்டி விட்டிருக்கிறோமே, வக்கீல் நோட்டீஸ் வருமா, வராதா?

நம்முடைய படம் 'ரிலீஸ்' ஆகிற அன்றைக்கே வேறு இரண்டு பெரிய படங்களும் வெளிவருகின்றனவாமே, நம்முடைய படத்துக்குக் கும்பல் வருமா, வராதா?

படத்தைப் பற்றிப் பத்திரிகைகளில் நல்லபடியாக விமரிசனம் வருமா, வராதா?

நாம் போட்ட மொத்தப் பணமும் திரும்பி வருமா, வராதா?

ஆமாம், நம் படம்தான் டப்பா ஆகிவிட்டதே, கோர்ட்டிலிருந்து ஜப்தி வாரண்ட் வருமா, வராதா?

## தொழிலதிபர் :

**பு**திதாக நாம் தொடங்கவிருக்கும் தொழிற்சாலைக்கு அரசாங்கத்திடமிருந்து அனுமதியும் லைசென்ஸும் வருமா, வராதா?

நம்முடைய தயாரிப்புகளுக்கு 'ஆர்டர்' நிறைய வருமா, வராதா?

தயாரிப்புச் செலவுக்கும், விற்பனை விலைக்கும் கட்டு வருமா, வராதா?

தொழிற்சாலை யூனியனில் ஆளும் கட்சி தலை நுழைக்கப் பார்க்கிறதாமே, இதனால் தகராறு ஏதேனும் வருமா, வராதா?

தொழிலாளர்கள் இரண்டு யூனியன்களாகப் பிரிந்து விட்டார்களாமே, அவர்களுக்குள் அடிதடி, மோதல் வருமா, வராதா?

தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்யப் போகிறார்களாமே, அப்போது ஏதேனும் அசம்பாவிதம் நேர்ந்தால் சமயத்தில் போலீஸ் உதவி வருமா, வராதா?

வேலை நிறுத்தத்தின்போது தொழிலாளர்கள் இயந்திரங்களைச் சேதப்படுத்தியதற்கும், கார்களைக் கொளுத்தியதற்கும் இன்ஷூரன்ஸில் பணம் கேட்டிருக்கிறோமே, அது வருமா, வராதா?

ஆளும் கட்சியின் மாவட்ட மகாநாட்டுக்கு ஆலை அதிபர்களிடமிருந்து, 'நன்கொடை' வசூலிக்கிறார்களாமே, அந்த வேண்டுகோள் ஆறு மாதங்களாக மூடிக்கிடக்கும் நமக்கும் வருமா, வராதா?








தொழில் தகராறில் நமக்குச் சாதகமாகத் தீர்ப்பு வருமா, வராதா?

திரும்பவும் முன்போல் தொழிற்சாலை ஒழுங்காக இயங்கும் ஒரு நாள் வருமா, வராதா?

நம் தொழிற்சாலையை அரசாங்கமே எடுத்து நடத்தப் போகிறதாமே, நமக்கு உரிய நியாயமான நஷ்ட ஈடு வருமா, வராதா?

அரசாங்கம் நிர்ணயித்த நஷ்டஈட்டுத் தொகை நாம் மண்டையைப் போடுவதற்கு முன்பாகவேனும் வருமா, வராதா?

## அரசியல்வாதி :

முதல் முதலாக மேடை ஏறிப் பேசப் போகிறோமே, பேச்சு சரளமாக வருமா, வராதா?

வட்டச் செயலாளர் பதவிக்குப் போட்டியிடுகிறோமே, நமக்கு எதிர்ப்பு வருமா, வராதா?

வட்டச் செயலாளர் என்கிற முறையில் அரசாங்க அதிகாரிகளை ஓட ஓட விரட்டுகிறோமே, அது பற்றிச் சட்டசபையில் கேள்வி வருமா, வராதா?

சண்டை போட்டு 'டிக்கட்' வாங்கிச் சட்டமன்றத் தேர்தலுக்கு நிற்கிறோமே, வோட்டு வருமா, வராதா?

தேர்தலில் வெற்றி பெற்று விட்டோம்; நமக்கு மந்திரி பதவி வருமா, வராதா?

அமைச்சரவையில் 'முதல்வருக்கு அடுத்த படி நான்தான்' என்று சொல்லிக் கொள்ளும் படியாக 'ராங்க்' வருமா, வராதா?

அமைச்சர் என்கிற முறையில் நாம் பேசுகிற மேடைப் பேச்சுக்களெல்லாம் வெட்டப்படாமல், சுருக்கப்படாமல் எல்லாப் பத்திரிகைகளிலும் வருமா, வராதா?

முதல்வரைப் போலவே நமக்குப் பிறந்த நாளன்று மலர்க் கிரீடமும், கேக்கும் அன்பளிப்புகளும் வருமா, வராதா?

. வெளிநாட்டிலிருந்து திரும்பும்போது கஸ்டம்ஸ் அதிகாரிகள் 'கண்டுகொள்ளாமல்' இருந்துவிட நாம் நிறையச் சாமான்களைக் கொண்டு வந்திருக்கிறோமே, அது பற்றிப் பத்திரிகைகளில் பரபரப்பான செய்திகள் வருமா, வராதா?

நம் அமைச்சரவையின் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் வருமா, வராதா?

'கட்சிப் பணிக்காக மூத்த அமைச்சர்கள் பதவி விலக வேண்டும்' என்று முதல்வர் அறிவித்திருக்கிறாரே, விலகச் சொல்லி நமக்கும் கடிதம் வருமா, வராதா?

பறிபோன மந்திரி பதவி நமக்குத் திரும்பி வருமா, வராதா?

## குடும்பஸ்தா :

உயரே உயரே போய்க் கொண்டிருக்கும் விலைவாசிகளெல்லாம் கீழே இறங்கி வருமா, வராதா?

காலில் விழாத குறையாக ராமசுப்பு நம்மிடம் இருநூறு ரூபாய் கடன் வாங்கிக் கொண்டு போனானே, அது திரும்பி வருமா, வராதா?

போன வருஷத்தை விட இந்த வருஷம் அதிக போனஸ் வருமா, வராதா?

பையனுக்குக் கல்லூரியிலிருந்து அட்மிஷன் கார்டு வருமா, வராதா?

நம்முடைய பெண்ணைப் பார்த்துவிட்டுப் போனவர்கள் 'கடிதம் போடுகிறேன்' என்றார்களே, கடிதம் வருமா, வராதா?

மாப்பிள்ளை வீட்டார் போடுகிற நிபந்தனைகளுக்கும் நமக்கும் ஒத்து வருமா, வராதா?

பெண் கல்யாணத்துக்கென்று ஆபீஸிலும் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி பேரிலும் கடன் கேட்டிருக்கிறோமே, தக்க சமயத்தில் பணம் நம் கைக்கு வருமா, வராதா?

மண்டையைப் போடுவதற்கு முன்பாவது மானேஜர் நாற்காலியில் உட்காருகிற சந்தர்ப்பம் வருமா, வராதா ?

இப்படி எத்தனையோ பிரச்னைகளைப் போட்டு மனத்தைக் குழப்பிக் கொண்டிருக்கிறோமே, இன்றைக்கு ராத்திரி நமக்குத் தூக்கம் வருமா, வராதா?

## எழுத்தாளர் :

'வருமா, வராதா' என்ற தலைப்பில் கட்டுரை எழுதி அனுப்பியிருக்கிறோமே? அது பிரசுரத்துக்கு ஏற்றுக் கொள்ளப் பட்டது என்ற கார்டு வருமா வராதா?






குடும்பத் தலைவரின் மாத வருமானத்தைப் பொறுத்து அந்தக் குடும்பத்துக்கு மாதா மாதம் ஒரு குறிப்பிட்ட அளவு ஜீனி தடையின்றிச் சௌகரியமாகக் கிடைக்க வேண்டுமென்பதற்காகத்தானே தமிழக அரசு ஜீனிக் கார்டுகள் தந்துள்ளது? வெளி மார்க்கெட்டில் மக்கள் ஜீனிக்கு அநியாய விலை கொடுத்து அவதிப்படுவதைத் தடுக்கத்தானே இந்த ஏற்பாடு? ஆனால், ''ஏன்தான் இந்தக் கார்டைக் கொடுத்துத் தொலைத்தார்களோ?'' என்று பலரும் இப்பொழுது எண்ணி வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.— கார்டுகள் தரப்படுவதற்கு முன்பே அரசின் விற்பனை இடங்களில் ஜீனி சௌகரியமாகக் கிடைத்தே வந்தது. அப்பொழுது ஜீனிக்கு வெளி மார்க்கெட்டில் நிலவிய அதிகபட்ச விலை ரூ. 2-40. ''ஒரு மாதத்தில் கார்டுக்கு இரு தடவைகள் ஜீனி போடப்பட வேண்டும்'' என்றிருக்க, கார்டு கொடுக்கப்பட்டதிலிருந்து இதுவரை இங்கு எங்களுக்கு ஒரே ஒரு முறை மட்டுமே ஜீனி போடப்பட்டுள்ளது. வெளிமார்க்கெட்டில் இப்பொழுது ஜீனி 3.50 ரூபாய் வரைக்கும் விற்றுக் கொண்டிருக்கிறது. அந்த விலைக்கு ஜீனி வாங்க வேண்டியதுக்கு நாங்கள் உள்ளாகிச் சங்கடப்பட்டுக் கொண்டிருக்கிறோம். பொதுமக்களின் துயர் துடைக்கும் லட்சணமா இது?

மேலூர்
22—8—72 எஸ். வைத்தியநாதன்

சென்ற 15—8—72 சுதந்திர தின வெள்ளி விழாவன்று பாண்டியன் போக்குவரத்துக் கழகம், மதுரை நகர பஸ்களில் விருப்பம்போல் எங்கு வேண்டுமானாலும் எத்தனை தடவை வேண்டுமானாலும் அன்று மட்டும் பிரயாணம் செய்யக் கட்டணம் ரூபாய் ஒன்று வாங்கி அடையாள அட்டை வழங்கியிருந்தது. இது ஒரு நன்முயற்சியே. ஆனால் வழங்கிய அட்டையில் வரிசை எண்கள் குறிப்பிடப்படவில்லை. எத்தனை பிரயாணச் சீட்டுகள் விற்கப்பட்டிருக்கும் என்பதை யாரும் கண்டுபிடிக்க முடியாது. சீரியல் எண் இல்லையெனில் மேற்படி நிர்வாகத்தில் ஊழல்கள் நடைபெறத் துணை புரியும்.

மதுரை - 10
22-8-72 இரா. சித்தரஞ்சன்

என்னுடைய ஏழு வயதுப் பேரன், ராம்ஜி, ரங்கநகர் நகராட்சித் துவக்கப் பள்ளியில் மூன்றாவது வகுப்பில் படிக்கிறான். கடந்த 8—7—72 அன்று ஒரு சக மாணவன் எஃகுப் பிளேடினால் பென்சில் சீவிக் கொண்டிருக்கும்பொழுது, பக்கத்தில் நின்று கொண்டிருந்த ராம்ஜியின் கன்னத்தில் பிளேட் பட்டுப் பலமான ரத்தக் காயம் ஏற்பட்டது.

தலைமை ஆசிரியை, ஸ்ரீமதி மீனாக்ஷி உடனே அருகில் இருக்கும் அரசாங்க ஆஸ்பத்திரிக்கு அவனை அழைத்துச் சென்று சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தார். அதற்குமுன் பையனுக்கு முதலுதவி அளித்து, பீறிக்கொண்டு வந்த இரத்தத்தை நிறுத்தினார்.

சிகிச்சை முடிந்தவுடன் பையனை வீட்டில் கொண்டு வந்து விட்டு மிக வருத்தத்துடன் நடந்ததை விவரமாய் அறிவித்தார்.

இவர் கடமை உணர்ச்சியுடனும் மனிதாபிமானத்துடனும் செய்த உடன் உதவி மிகவும் போற்றத்தக்கது. இவர் குழந்தைக்குக் காயம் பட்டவுடன் என் வீட்டுக்குச் சொல்லி அனுப்பி, எங்கள் வீட்டிலிருந்து யாராவது ஒருவர் போய்ப் பிறகு பையனைச் சிகிச்சைக்கு அழைத்துப் போக நேர்ந்திருந்தால் குழந்தைக்கு அபாய நிலைமை ஏற்பட்டிருக்கக் கூடும். ஏனெனில், சம்பவம் நடந்த சமயத்தில் நான் வீட்டில் இல்லை. பையனுடைய பிதாவும் வீட்டில் இல்லை. இதுபோல் பொறுப்புடன் கடமையாற்றும் ஆசிரியர் ஆசிரியைகளை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

திருச்சி — 6
20—8—72 என். சீநிவாசய்யர்

ஆசிரியர்களுக்காக ஒரு விழா வைத்து அதற்காக ஆசிரியர்களையே பொருள் செலவு செய்து விழா கொண்டாட வைப்பது மிகவும் வேதனையான ஒன்றாக உள்ளது. எதற்கெடுத்தாலும் ஆசிரியர்களையே பயன்படுத்திக்கொள்ளும் அரசும் பொதுமக்களும் ஆசிரியர் இனத்தின் மேல் அக்கறை கொள்ளாமல் ஆசிரியர்களையே விழாக் கொண்டாடிக்கொள்ளச் செய்வதும், பாராட்டிக் கொள்ளச் செய்வதும் நன்றாக இல்லை. ஆசிரியர் நாள் கொடிகளை ஆசிரியர்களே விற்பனை செய்து நிதி திரட்டித் தர வேண்டியுள்ளது. மற்ற அரசு தாக்கீதுகளெல்லாம் எல்லா அரசு அலுவலகங்களுக்கும், பஞ்சாயத்துக்களுக்கும் ஊராட்சி ஒன்றியங்களுக்கும் செல்லும்போது ஆசிரியர் தினம் பற்றிய அறிக்கைகளும் செயல் முறைகளும் பஞ்சாயத்துக்களுக்கும், பொது மக்களுக்கும் அறிவிக்கப்படாமல் இருப்பது பெரும் வருத்தத்தை அளிக்கிறது. இப்படி ஆசிரியர்கள் விழாவை ஆசிரியர்களே கொண்டாடிக் கொள்வதைவிட, விழாக் கொண்டாடாமல் நிறுத்திக் கொள்வது மேலாக இருக்கும்.

கார் கொடுக்கவும், பிறந்த நாள் கொண்டாடவும், மாநாடு நடத்தவும் கட்சிகள் செலவிடும் தொகையில் ஒருசிறிதை ஆசிரியர் தின விழாவுக்குச் செலவு செய்ய முன்வரலாம். ஆசிரியர்கள் உரிய முறையில் கௌரவிக்கப்பட அரசு ஏற்பாடு செய்ய வேண்டும்.

பாவநாசம்
26—11—72 வி. ப. க. மூர்த்தி

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor : T. Sadasivam

# உயிரோவியமான உற்சாகம் துள்ளும் இரட்டைக் குழந்தைகள்

எங்கள் இருவருக்கும் இதமான ஒரு குழந்தை உணவை அம்மா தேடினாள்.

அப்போது அமுல்ஸ்ப்ரே கிடைத்துவிட்டது. அது சிறந்தது என்பதை நாங்கள் ஒப்புக்கொள்ளுகிறோம்.

ASP/AS/24

கீவ், சக்தியே உருவான உயிரோவியம். சியாமக், எதையும் விரைவில் கற்கும் திறன் படைத்தவன். தினமும் பல விஷயங்களைக் கண்டறியும் திறமை கொண்டவன்.

இந்த இரட்டைக் குழந்தைகளுக்குப் பொதுவான அம்சம்: அமுல்ஸ்ப்ரே மற்றும் துள்ளிவரும் தூய ஆரோக்கியம்.

உங்கள் குழந்தைக்கும் பிறந்த முதல் வாரத்திலிருந்தே அமுல்ஸ்ப்ரே தரத் தொடங்குங்கள். அமுல்ஸ்ப்ரே எளிதில் சீரணிக்கக் கூடியது; சரி விகித ஊட்டச் சத்துக்கள் நிறைந்தது. அவசியமான வைட்டமின்கள், தாதுப் பொருள்கள் மற்றும் சீரான வளர்ச்சிக்காக அதிக அளவிலே தரமுயர்ந்த புரதச் சத்துக்கள் கொண்டது. இந்தியாவிலேயே உச்ச விற்பனையுள்ள குழந்தை உணவாக விளங்குவதிலிருந்தே அமுல்ஸ்ப்ரே தாய்மார்கள் மற்றும் டாக்டர்களின் நம்பிக்கையைப் பெற்றிருப்பது பளிச்சிடுகிறது.




# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது**

கைரா டிஸ்ட்ரிக்ட் கோ-ஆப்பரேடிவ் மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன் லிட்., ஆனந்த், குஜராத்.



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
ஸ்ரீலங்காவில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

# உலகின் மிகச்சிறந்த மனங்கவர் மலர்கள் பூத்துக்குலுங்கும் ஹாலந்திலிருந்து

SIGMA WALL DELUXE ACRYLIC

## ஸிக்மா பெயின்ட்ஸ் "டச்" சிறப்புடன், எண்ணற்ற வண்ணங்களில் வருகின்றன.

தரணியில் புகழ் வாய்ந்த தரமுள்ள பெயின்ட் களைத் தயாரிப்பதில் 250 ஆண்டு "டச்" அனுபவத்தைக் கொண்ட ஸிக்மா பெயின்ட்ஸ் அற்புத வண்ணங்களில் கிடைக்கின்றன.

ஸிக்மா வீடுகளின் தேவைகளுக்கு ஈடு இணையற்ற பெயின்ட்களை வழங்குகிறது. அவை சிக்கனமானவை. நீடித்துழைப்பவை. நீண்ட கால சிறப்பிடிமானம் கொண்டவை. அதிக பரப்பளவைப் பூசக் கூடியவை. எப் பருவத்திலும் உறுதியோடு விளங்க உத்தரவாதம் பெற்றவை.

**தேவைக்கேற்ற பெயின்டை அளிக்கிறது ஸிக்மா.**




ஸிக்மா பெயின்ட்ஸ் லிமிடெட்
221, டி. என். ரோட், பம்பாய் 400,001



ஸிக்மா கோட்டிங்ஸ் பிவி (ஹாலந்து)வின் துணைக் கம்பெனி ... ஒத்துழைப்புடன்

CHAITRA-SP-25 Tam

விநியோகஸ்தர்கள் : இண்டோகெம் பிரைவேட் லிமிடெட், 52/54, ரட்டன் பஜார், சென்னை